ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.

| | | |
|---|---|---|
| சிலம்பு ௰ | மெய்கண்டான் யாண்டு-௭௱௬ ஆடித் திங்கள் 1932ஆ ஜூலைமீ—ஆகஸ்டுமீ | பரல் ௭ |

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

கூச நீக்கிக் குற்ற நீக்கிச் செற்றமன நீக்கி
வாச மல்கு குழலி ஞர்கள் வஞ்சமனை வாழ்க்கை
ஆசை நீக்கி யன்பு சேர்த்தி யென்பணிந் தேறேறும்
ஈசர் கோயி லெதிர்கோள் பாடி யென்பதடை வோமே.

பதவுரை:—

கூசம் நீக்கி—(சிவனை வழிபடுதற்கு) நாணுகையை மாற்றி

(மனம்) குற்றம் நீக்கி—மனதிலே உள்ள அவிச்சையாகிய குற்றத்தை நீக்கி

வாசம் மல்கு குழலினர்கள் வஞ்சம் மனைவாழ்க்கை (மனம்) ஆசை நீக்கி—அதுபற்றி உலக இன்பநுகர்வின்பொருட்டு மணங்கமழ்கின்ற கூந்தலையுடைய பெண்களுடன்கூடி வாழ்கின்ற கபடமான இல்வாழ்க்கையில் வைத்துள்ள மன ஆசையை ஒழித்து,

மனம் செற்றம் நீக்கி—அவ்வுலக இன்பநுகர்வு கிடையாதபோது மனத்திலே எழுகிற வெகுளியை அகற்றி,

அன்பு சேர்த்தி—சிவனிடத்தில் நிலையான அன்பு வைத்து,

என்பு அணிந்து—அயன் திருமால் இருவர்களுடைய எலும்புகளை (த்தோள் மேலே) அணிந்துகொண்டு,

ஏறு ஏறும்—ஊர்தியாக எருதின்மேல் ஏறுகின்ற

ஈசர் கோயில்—சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயில்

எதிர்கொள்பாடி என்பது—திருஎதிர்கொள்பாடி என்ற தலத்தில் உள்ளது என்பது (அடியார்களாகிய நாம்) அறிந்து

அடைவோமே—அங்கே சென்று வணங்குவோம்.

விளக்க உரை:—

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய இந்தத் தேவாரப்பாட்டு வீடு பேற்றினை விரும்பும் அடியார்கள் எவ்வாறு சிவபெருமானைத் திருக்கோயிலின்கண் வழிபடுதல்வேண்டும் என்பதைக் கூறுகின்றது.

கூசம் நீக்கு—கூச்சம் என்ற சொல் கூசம் எனத் தொக்குநின்றது.

வணங்குதற்கு நாணுகை—வணங்குதற்கு மனத்தில் விருப்பமில்லாது அதனால் உடல் உறுப்புகள் நிலமுற வணங்குதல் முதலிய செயல்களைச் செய்தற்கு ஒருப்படாதிருத்தல்.

(மனம்) குற்றம் நீக்கி—குற்றம் என்பது இங்கே பஞ்சக் கிலேசங்களில் ஏனைய குற்றங்களுக்குக் காரணமாய் விளங்குகிற அவிச்சை (அறியாமை)யைக் குறிக்கிறது. அவிச்சை என்பது பேரின்பந் தரும் சிவனை நிலையான உண்மைப் பொருளாக அறியாது உலகத்தை நிலையாயுள்ள இன்பப்பொருள் என்று மயங்கி அறிதல். இதனைத் திருவள்ளுவர் மயக்கம் என்பர். செற்றம் என்ற சொல்லுடன் சேர்ந்திருக்கிற மனம் இதனுடனும் சேர்க்கப்பட்டது.

வஞ்சமனை வாழ்க்கை (மனம்) ஆசை நீக்கி,—உலக இன்பநுகர்ச்சிகளைக் குறியாத இல்வாழ்க்கை இன்பந்தருவது போன்று குறித்த இல்வாழ்க்கை இன்பந்தாராமல் துன்பமே தருதலில் அது வஞ்சகமனை வாழ்க்கை எனக் கூறப்பட்டது. அறநெறிப்பட்ட சிற்றின்ப இல்வாழ்க்கையும் உயிர்ப்பற்றும் பொருட்பற்றும் உடையது ஆதலின் அப்பற்றுக்களை நீக்கி ஒருமை மனத்துடன் சிவபெருமானைப் பற்றும் அடியார்களுக்கு அது பொருந்தாது என்பது தோன்ற 'வஞ்சமனை வாழ்க்கை ஆசை நீக்கி' என அடிகள் கூறியருளினர்.

திருஞானசம்பந்த அடிகள் அதே கருத்தை திருச்சோற்றுத்துறைப்பதிகத்தில்,

"செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னு தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமான் ஒளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே," என்றும்,

திருநாவுக்கரசு அடிகள் கோயில், பெரிய திருத்தாண்டகத்தில்,
"அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தை அகல் ஞாலத் தகத்துள் தோன்றி, வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும்விட்டு வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும், பொருந்தணைமேல் வரும் பயனைப் போக மாற்றிப் பொதுநீக்கித் தனை நினைய வல்லோர்க் கென்றும், பெருந்துணையை" என்று கூறியிருத்தலையும் நோக்கியே செற்றத்துடன் சேர்க்கப்பட்ட மனம் என்ற சொல் ஆசையுடனும் சேர்த்துப் பொருள் கூறப்பட்டது.

பஞ்சக் கிலேசங்கள் அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, வெகுளி என்பன. இவை பிரகிருதியாயபோக நுகர்ச்சிகளுக்கு ஏதுக்களாயிருப்பன. இவைகளின்றிப் புருடதத்துவ மெய்திநின்ற ஆன்மாவுக்கு உலக போகங்கள் நிகழா. இவ்வைந்து கிலேசங்களில் திருவள்ளுவர் அகங்காரத்தை அவிச்சையிலும் அவாவை ஆசையிலும் அடக்கிக் காமம் (=ஆசை) வெகுளி (=செற்றம்) மயக்கம் (=அவிச்சை) என மூன்றாகத் திருக்குறள் 36-வது மெய்யுணர்தல் அதிகாரம் 10-வது குறளிற் கூறுகின்றனர். அதே மூன்று குற்றங்களும் இப்பாட்டிற் கூறப்பட்டிருக்கின்றன. அவிச்சை (குற்றம்) ஆசை (காமம்) வெகுளி (செற்றம்) என்ற வரிசை முறைமையில் வரவேண்டியன செய்யுள் ஆதலின் அம்முறை பிறழ்ந்து கூறப்பட்டன. உரையில் வரிசை முறைமைப்படி பொருளுரைக்கப் பட்டது.

அன்பு சேர்த்தி—அன்பு என்பது இங்கே மாணிக்கவாசக சுவாமிகள் கூறுகிற 'வேண்டாதொன்றும் வேண்டாது மேவும் அயரா அன்பு' (Whole-hearted unchanging Impersonal Love.)

என்பு என்பது அயன் திருமால் இருவர்களுடைய எலும்பு. அவர்கள் வாழ்நாள் முடிவில் சிவபிரான் அவர்களுடைய எலும்பைத் தரித்தருளினன்.

"நங்கா யிதென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடி
கங்காள மாமாகேள் காலாந் தரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ"

என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியருளினமை காண்க. எதிர்கொள் பாடி என்பது—என்பது என்ற சொல்லுக்குமுன் 'உள்ளது' என்ற சொல் லும் அதற்குப்பின் 'அறிந்து' என்ற சொல்லும் அவாய்நிலையால் தொக்கி நின்றன. அவை சொல்லெச்சங்கள். அடைவோம்—என்பது அடைந்து வழிபடுவோம் என்னும் பொருள்பட நின்றது. இது உளப்பாட்டுத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்று. அது '(அடியார்களாகிய நாம்) என்ற தொகைச்சொல்லை எழுவாயாக்கொண்டது.

எ—ஈற்றசை.

சிவபெருமான் எலும்பை ஏன் அணிந்திருக்கிறார் எனில் அயன் திருமால்களின் எலும்புகளை அவ ரணியாவிட்டால் அவைகள் இற்று மண்ணாய்விடும். மறுபடியும் அவர்களுடைய உடம்பு படைத்தற்கு எலும்புகள் வேண்டியிருத்தலின் அவைகளைச் சிவபெருமான் முதுகின் மேலே அணிந்திருக்கிறார். இக்கருத்தைத் திருமூல மகாமுனிவர் திரு மந்திரம் 371-ம் பாட்டில்,

"எலும்புங் கபாலமு மேந்தி யெழுந்த
அலம்பன் மணிமுடி வானவ ராதி
எலும்புங் கபாலமு மேந்திலனாகில்
எலும்புங் கபாலமு மிற்றுமண் ணாமே"

என்று கூறியருளினர். திருநாவுக்கரசு சுவாமிகளும் தனித்திருவிருத்தம் 7-வது பாட்டில்

"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடல் மூடி யிறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமுங் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.

என்று கூறியருளினமை காண்க.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry - வடிவளவை

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர்-காழி. சிவ. கண்ணுசாமி B.A.]

(உஎஎ பக்கத் தொடர்ச்சி)

Focus என்பதற்கு அடுப்பு என்பதே நேர்பொருள் ; ஆனு லும் எடுத்தாளப்படும் பழக்கத்தினல் இடக்கர் மொழிகளும் செம் மொழிகளாகக் கருதப்படும் ஒரு நியதிபற்றி அறிவில் மிகுந்த அறிவியல் வல்லுநருங்கூட Focus என்பதற்குக் கதிர்கள் ஒன்று கூடுமிடம் அல்லது கதிர்கள் பிரிந்து செல்லுங் குற்று என்பது பொருள் என்று ஒப்புக் கொள்ள இசைகின்றனர். ஆனுல் அத் தகையோரே Focus என்பதற்கு அடுப்பு என்று நாம் தமிழில் பொருள் கொண்டால் சினந்து சிறுவர். அஃதெவ்வாருயினு மாகுக: தமிழில் அத்தகைய இடர்ப்பாட்டைக் கையாளவேண் டிய கட்டாயமில்லை ; என்னை? அறிவியலுக்கேற்ற நேர்மொழிகளை அதன்கண் அமைத்துக் கோடல் எளிதாகலின்.

சுவை என்னும் சொல்லடியாப் பிறந்தது சுவியம் ; சுவை யுள்ள பண்ணிகாரம் என்று அது பொருள்படும். அஃதேபோல் சுன் என்பதிலிருந்து பிறந்தது சுன்னம், எண் என்பதிலிருந்து பிறந்தது எண்ணம், கள் என்பதிலிருந்து பிறந்தது கள்ளம் (அதா வது திருட்டு); எனவே அம் என்ற ஈறு சேர்த்தமைக்கப்பட்ட மொழிகள் வேர்ச் சொல்லிற்குரிய பண்பு மிகுதியையே குறித்து நிற்கின்றமை எளிதில் ஊகிக்கப்படும். இதுகொண்டு குவி என் னும் அடிச்சொல்லைத் தேர்ந்தெடுத்து அதனேடு அம் என்னும் ஈற்றைச் சேர்த்து மொழியமைத்தால் குவியம் என்னும் மொழியைப் பெறலாம். அதற்குப் பல ஒன்றுசேர்ந்து குவியு மிடம் என்பது பொருளாகும். ஆகவே Focus என்பதற்குத் தமிழ் நேரிடை குவியம் என்பதாம். (Convergence) என்பதும் அதே பொருளது. இதைவிட Focus என்பதன் அறிவியற் பொருளை நன்கு தெரிக்கும் ஒரு சொல்லை எளிதில் அமைத்தல் முடியாதென்றே கூறலாம்.

அவ்வாருயின் Focus என்பதற்குக் கதிர்கள் பிரிந்து செல் லுங் குற்று என்னும் மற்ருெரு பொருளும் உண்டே எனின் அப்

பொருளைக் குறித்தற்கு விரிமுனை என்னும் சொல்லை அமைத்துக் கொண்டு எற்றபெற்றி Focus என்னுஞ் சொல்லுக்கு, குவியம் என்றோ விரிமுனை என்றோ பொருள் கூறிக்கொள்ளலாம். குவி மையம் அல்லது விரிமையம் என்று பொருள் கொண்டாலும் இழுக்காகாது.

Meet என்பது முட்டு என்னும் பொருட்டு. அது தொடுவது விடுவது ஆகிய இரண்டையுங் குறிக்கும்.

Asymptotes என்பது கிட்டிச் சென்றும் தொடாமற் செல் லும் வரைகளைக் குறிப்பதாம். அதாவது கிட்டிமுட்டாவரை, அல்லது கிட்டி முட்டான் என்று சுருங்கக் கூறப்படுவதாம். முட் டாவரை, கிட்டித்தொடான், தொடாவரை, தொடான் என்று கூறினும் அமையும்.

Conic Sections என்பது அளவை நூலைப் பொறுத்தவரை யில் கூம்பு வெட்டளவை நூல் என்று பொருள்படும்; அதைக் கூம்பு வெட்டளவை என்றே குறிக்கலாம்.

Surface என்பது Sur + face என்னும் இரண்டு மொழிக ளின் கூட்டாகும். மேல் முகம் அல்லது முகம் என்பதே அதன் பொருள்.

| | |
|---|---|
| External Surface of a Solid | கட்டியின் புறமுகங்கள் |
| Plane Surface | தட்டை முகம் |
| Rough Surface | காட்டு முகம் |
| Even Surface | மழுக்க முகம் |

Flatness என்பது horizontality என்ற பண்பையும் உள் ளடக்கி நிற்றலின் Flat Surface மட்ட முகம் என்று பொருள் படும்.

Equal என்பது போல, ஒப்ப, நேர, நிகர என்னும் பொருள் களை யுடைத்தாகலின் Equality என்பது போன்மை, ஒப்பு, நேர்மை, நிகர்ப்பு என்று எற்றபெற்றி பொருள்படும்.

The area of a Triangle K. P. T. is equal to the area of the Quadrangle M. N. V. L. = மும்முடக்கி கா. பா. டா வின் பரப்பும், நான் முடக்கி மா. நா. வா. லாவின் பரப்பும் ஒவ்வும்.

Frustum என்பதற்குத் துண்டு என்பதே நேர்பொருளாயி னும் வழக்காற்றில் அது தலையை வெட்டிய பிறகு மிகுந்துள்ள உடற்பகுதியையே குறிக்கும்; எனவே உடற்குறை அல்லது கட்டை என்பதே அதன் பொருள். கட்டையென்னுஞ் சொல்லே சுருக்கமாகவும் சொல்லாக்கத்திற்குப் பெரிதும் பயன்படுவதுமா கவு மிருத்தலின் அதுவே கோடற்பாற்று.

Frustum of cone—வட்டக்கூம்பின் கட்டை, கூம்புக்கட்டை

Frustum of a Pyramid—பட்டைக் கூம்பின் கட்டை.

Locus என்பதற்குக் குறிப்பிட்ட ஒரு இடம் என்பதே பொருளாயினும், அளவை நூலில் ஒழுக்கு என்றே அது பொருள்படும்.

| | |
|---|---|
| Locus of a Point | குற்றின் ஒழுக்கு, குற்றொழுக்கு |
| Locus of a Line | வரையொழுக்கு |
| Locus of a Straight line | நேர்வரை யொழுக்கு |

Magnitude என்பது பருத்த அல்லது பெரிய என்று பொருள்படும் magnus என்னும் சொல்லடியாப் பிறந்தது. பரும் அல்லது பருமன் என்ற சொல்லே வேர்ச்சொல்லாக் கொண்டு பருப்பம் என்று அதற்குப் பொருள் கோடலே ஏற்றதாம். இச் சொல் நீளம், அகலம், அடைவு ஆகிய எல்லாவற்றின் மிகுதியை யும் குறிக்கும்.

Origin என்பது தோற்ற அல்லது பிறக்க என்னும் பொருள்படும் Origo என்னும் சொல்லடியாப் பிறந்ததாகும். ஆகவே தோற்றுவாய் அல்லது பிறப்பிடம் என்று பொருள் கோடல் ஏற்றதாம்.

Position என்பது இடம் பெறுவிக்க என்று பொருள்படும் Positium என்ற சொல்லடியாப் பிறந்தது. இடம் அல்லது நிலை என்று அது மொழிபெயர்த்தற்பாற்று. அவ்விரண்டும் ஏற்ற பெற்றி தேர்ந்து அமைத்துக் கோடற் குரியனவாம்.

If the position of a point in a circle is such that all lines drawn from it to meet the circumference are

equal, that point is the centre of the circle = ஒரு வட்டத்தினுள்ள ஒரு குற்றுத் தன்னிடமிருந்து சுற்றுவட்டத்தை முட்ட இழுக்கும் நேர்வரைகள் யாவும் ஒருசரியாய் இருக்கக்கூடிய அந்நிலையில் இருக்குமானால் அக்குற்றிற்கு வட்டத்தின்மையம் என்று பெயர்.

Orthagonal circles என்பது தம்முடைய சுற்றுவட்டங்கள் ஒன்றினையொன்று செம்முடக்காக வெட்டும் நிலையிலுள்ள வட்டங்களாம்; விரித்துக்கூறின் சுனையிலுள்ள இருவட்டங்களின் தொடுவரைகளும் செம்முடக்காக இருக்கும். எனவே இத்தகைய வட்டங்களைத் தமிழில் சேவ்வெட்டு வட்டங்கள் அல்லது முழுவெட்டு வட்டங்கள் என்று கூறுதல் பொருந்தும்.

ஒரு மும்முடக்கியின் மூன்று முடக்குகளிலுமிருந்து அவ்வவற்றிற்கு எதிரேயுள்ள சிறைக்கு இழுக்கப்படும் மூன்று குறுவரைகளும் ஊடுருவிச்செல்லும் மும்முடக்கியின் மையத்திற்கு Orthocenter of a Triangle என்று பெயர். இதைத் தமிழில் மும்முடக்கியின் செம்மையம் அல்லது மும்முடக்கியின் முழுமையம் என்று சுருக்கமாகக் கூறலாம்.

Maxima என்பது பெரிது என்றும் Minima என்பது சிறிது என்றும் பொதுவாகப் பொருள்படுமாயினும், வடிவளவையில் அவைகள் எல்லாவற்றிலும் பெரியது, எல்லாவற்றிலும் சிறியது என்றே வழங்கப்படுகின்றன. தமிழில் "பென்னம் பெருமை" என்றால் பெரியதினும் பெரியது என்றும், "சின்னஞ் சிறுமை" என்றால் சிறியதினும் சிறியது என்றும் வழக்காறுள தாகலின் Maxima பென்னம் பெருமை, Minima சின்னஞ் சிறுமை என்று மொழி பெயர்க்கப்படும்.

| | |
|---|---|
| Maximum limit | பேரெல்லை |
| Minimum limit | சிற்றெல்லை |

Nine Points circle என்ற மரபுச் சொல்லுக்கு ஒன்பது குற்று வட்டம் என்பது பொருளாம்.

| | |
|---|---|
| Proportion | படிசு |
| Continued Proportion | தொடர்படிசு |
| Simple Proportion | எளிய படிசு, எள்படிசு |
| Compound Proportion | கலவைப்படிசு |

Proportionals என்பது படிசின் பகுதிகள்; எனவே படிசுப்பகுதிகள் அல்லது படிசுக்கூறுகள் என்று பொருள்படும்.

Mean Proportionals பொதுப்படிசுக்கூறு

Ratio of one to another என்பது முதற்பொருளுக்கும் இரண்டாவது பொருளுக்குமுள்ள தொடர்பின் தன்மை என்பதாகும். இஃது நான்காம் வேற்றுமை யுருபுப் பொருள்களில் ஒன்ருன தகவுப்பொருள் என்பதாம். தகவு என்பதற்கு அவ் வேற்றுமையில் Ratio அல்லது Relationship என்பதே ஆங்கில நேர்மொழி; வீதம் என்னும் சொல்லும் Rate அல்லது Ratio என்பதைக் குறிக்கும்; ஆயினும் Ratio என்பதற்குத் தகவு என்றும் Rate என்பதற்கு வீதம் என்றும் பொருள்கோடலே சிறந்தது.

Antecedent of ratio தகவின் முற்பகுதி ; தகவுமுதல்.

(A : B என்பதிலுள்ள A என்பது தகவுமுதல்)

Consequent of a ratio தகவின் வழி, தகவுவழி ; இங்கே வழி என்பது consequence என்றதையொத்து ஒன்றன் பயன் அல்லது விளைவு என்னும் பொருட்டு; வழிநூல் என்பது போல.

Extreme ஈறு

Extremes of a Proportion படிசீறுகள்

(A : B : : C : D என்பதிலுள்ள Aயும் Dயும் படிசீறுகள்)

Means of a Proportion படிசினிடைக் கூறுகள்
படிசிடைகள் (Bயும் Cயும் போல)

Reciprocity மறிமாறல்

Reciprocation மறிமாற்று (அடிமறிமாற்று என்பது தமிழிலுள்ள ஒரு அணி)

Reciprocal Ratios மறிமாறு தகவுகள். (A : Bயும் B: Aயும் மறிமாறுதகவுகள்)

Duplicate ratio இருமடித் தகவு

If P : K : : K : M then P is said to have to M the duplicate ratio of that which it has to K = "பா" "கா" விற்குள்ள தகவு "கா", "மா"வின் தகவுக்குச் சரியானல் "பா"

விற்குக் "கா" விடத்துள்ள தகவில் "பா"விற்கு "மா"விடத்து இருமடித்தகவு இருக்கிறதென்று சொல்லப்படும்.

Triplicate ratio — மும்மடித் தகவு

Invertendo அல்லது inversely என்பதற்கு மேல்கீழான அல்லது கீழ்மேலான அல்லது திருப்பிய என்பது பொருள்; அவற்றில் திருப்பிய என்பதே சிறந்தது.

If two ratios are equal their reciprocal ratios are equal — இரண்டு தகவுகள் ஒன்றிற்கொன்று சரியானல் அவை களின் மறிமாற்றத்தகவுகளுஞ் சரியே.

If four magnitudes are proportionals they are also proportionals when taken inversely = நான்கு பருப்பங்கள் படிசுக்கூறுகளானல் அவைகளின் திருப்பமும் படிசுக் கூறுகளே.

Similarity — ஒற்றுமை, ஒவ்வல், ஒருமாதிரி, ஒப்புமை, போன்மை

Dissimilarity — வேற்றுமை, ஒவ்வாமை, வேறுமாதிரி, ஒப்பாமை, போலாமை

Harmony என்பதற்குப் பொதுப்பட ஒன்றுகூட்டு ஒரு கூட்டு, இணக்கம், நேர்ச்சி, ஒப்புதல், ஒப்புர இசைவு, இசை, பொருத்தம் என்பனபோன்ற பல பொருள்களுள. ஆனல் வடிவளவைக்கேற்ற பொருளைத் தேர்ந்தெடுக்குங்கால் இசை நூலினும் அச்சொல் முக்கியமான தொன்றுகலான் இரண்டிற்கும் பொருத்தமான ஒன்றை ஆய்ந்து கோடல் வேண்டும். இசைவு என்று கொள்ளுதலே இரண்டிற்கும் ஏற்புடைத்து.

Harmonic section — இசைவு வெட்டு, இசைவெட்டு

If a finite straigt line is so divided internally and externally that the segments are in a given ratio it is said to be cut harmonically = ஓர் கந்துள நேர்வரையானது அதன் உட்பிரிவினைத் துண்டுகளும் புறப்பிரிவினைத் துண்டுகளும், குறித்த ஒரு தகவுக்கு உடன்படும்படி பிரிக்கப்படுமானல் அப் பிரிப்பிற்கு இசைவெட்டு என்று பெயர்.

Range — நிரை

Harmonic Range — இசை நிரை

| | |
|---|---|
| Ray | கதிர் |
| Pencil | கற்றை |
| Pencil of rays | கதிர்க்கற்றை |
| Vertex of Pencil | கற்றை முனை |
| Harmonic Pencil | இசைக்கதிர்க் கற்றை அல்லது சுருக்கமாக இசைக்கற்றை |
| System | முறைவைப்பு, முறை |
| System of lines | முறைவைப்பு வரைகள் அல்லது முறைவரைகள் |

Transversal cutting of a system of lines என்றால் முறைவரைகளைக் குறுக்கிடு வரை அல்லது சுருக்கமாக, குறுக்கிடு வரை, குறுக்குகள் என்பது பொருள்.

Complete Quadrilateral முழுநாற்சிறைஇ

Centre of Similarity or Similitude என்பது போன்மை மையம்.

---

(தொடரும்)

# நாகரிகம்.

[வித்துவான் G. தேவநேசனவர்கள்.]

'நாகரிகம்' என்னும் சொல்லுக்குத் 'திருந்திய வாழ்க்கை' என்பது பொருள். அறிவும் அதன் வழிப்பட்ட ஒழுக்கமும் சேர்ந்து திருந்திய வாழ்க்கையாகும். ஒழுக்கமின்றி அறிவுமட்டுமிருப்பின் அது நாகரிகமாகாது அநாகரிகத்தின்பாற்படுவதே யாகும்.

அறிவென்பது ஒழுக்கத்திற்குக் காரணமாய் இயற்கையாகவும் செயற்கையாகவும் இருவகையாயிருப்பது. அவற்றுள் இயற்கையாவது குடிப்பிறப்பாலும் தெய்வத்தாலும் உண்டாவது; செயற்கையாவது கல்வியாலும் நல்லினத்தாலும் உண்டாவது.

ஒழுக்கமென்பது அகம் புறமென்னும் இருவகைத் தூய்மை. அவற்றுள் அகத்தூய்மையாவது நினைவு சொல் செயலென்னும் முக்கருமங்களும் தூயவாயிருத்தல். புறத்தூய்மையாவது உடம்பு, உடை, உணவு, காற்று, வீடு முதலியன தூயவாயிருத்தல்.

புறத்தூய்மையினும் அகத்தூய்மையே நாகரிகத்திற்குச் சிறந்ததாக எண்ணப்படும். ஞானத்தாலும் ஒழுக்கத்தாலும் இல்லறத்தினும் பன்மாண் சிறந்த துறவறத்தில் புறத்தூய்மை ஒரு பொருளாகக் கொள்ளப்படுவதன்று. இல்லறத்தினும் ஒருவன் எத்துணை எளியனுயிருப்பினும், தன்னையும் தன்பொருள்களையும் தூயவாய் வைத்துக்கொள்வதே புறத்தூய்மை யாகும். அழகியனவும் விலை யுயர்ந்தனவுமாகிய உடைகளால் உடம்பைப் பொதிவதும், விலையும் சுவையுமிக்க உண்டிகளைப் பன்முறை யுண்பதும், மேனிலையும் அகலிடமுமுள்ள மாளிகைகளில் வாழ்வதும், வசதியும் விலை யுயர்ந்தனவுமான வாகனங்களில் ஊர்வதும், இயந்திரத்தாலும் எவலாளராலும் வினைசெய்வதும், இன்னும் இவைபோல்வன பிறவும் (அறிஞர்களும் அறிவிலிகளுமான) செல்வர்க்கே யுரிய ஆடம்பர வாழ்க்கையன்றி நாகரிக வாழ்க்கை யாகா. இவற்றை நாகரிகமென் றெண்ணுவது மேலைப் புதுநாகரிகம்பற்றிய திரிபுணர்ச்சியாகும்.

'கந்தையானாலும் கசக்கிக் கட்டுவ'தும்
'கூழானாலுங் குளித்துக் குடி'ப்பதும்

'குடிலானாலுங் கூட்டிக் குடியிரு'த்தலுமே தமிழ் நாட்டுத் தலைநாகரிகமாகும். கூட்டலாவது மயலகற்றல்.

பரிமேலழகர் திருக்குற ளுரைப்பாயிரத்தில் ஒழுக்கத்தைப் பற்றி, "ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று அவ்வவற்றிற் கோதிய அறங்களின் வழுவா தொழுகுதல்" என்று கூறியுள்ளார். இது குலந்தோறும் வேறுகி நடுவுநிலை திறம்பிய ஆரியவழி யொழுக்கமாதலின், எல்லார்க்கும் பொதுவானதும் நடுவுநிலை திறம்பாததுமான தமிழொழுக்கத்திற்குச் சிறிதும் வேண்டப்படாது. இதை அவ்வுரையாசிரியரே மீண்டும்,

"அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளொழித்து எல்லார்க்கு மொத்தலிற் பெரும் பான்மையாகிய பொதுவியல்பு பற்றி, இல்லறந் துறவறமென இருவகை நிலையாற் கூறப்பட்டது" என்று நூலாசிரியர் கருத்திற் கேற்பக் குறித்துள்ளார். ஆதலால்

ஒழுக்கமென்பது எல்லார்க்கும் பொதுவான முக்கருமத் தூய்மை யேயன்றிக் குலந்தோறும் வேறுபட்ட வருணாச்சிரம தருமமன்று.

நாகரிகமென்னும் சொல்லைத் திருவள்ளுவர் "கண்ணோட் டம்" என்னும் பொருளில் வழங்கியுள்ளார்.

"பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்னும் குறளுரையில்

நாகரிகத்திற்குக் கண்ணோட்டமென்று பொருள் கூறப்பட் டுள்ளது. இதே பொருளில் கம்பரும்,

"நாக்கரியும் தயமுகனார் நாகரிக ரல்லாமை"

என ஆண்டிருக்கின்றனர்.

கண்ணோட்டம் தூய நினைவுகளில் அல்லது திருந்திய குணங் களில் ஒன்றாதலின் நாகரிக மெனப்பட்டதென்க.

நாகரிகமென்னும் சொல் 'நகர் அகம்' என்னும் சொற்றொட ரின் (அல்லது பகுபதத்தின்) திரிபாகும். நகர் என்பது பேரூர் அல்லது பட்டினம். அகமென்பது இடம் அல்லது இடத்திலுள்ள ஒழுக்கம்.

மக்கட் பெருக்கால் சிற்றூர்கள் பேரூர்களாவதும், பேரூர்கள் நகரங்களாவதும் இயல்பு. சிற்றூர் சிறிது சிறிதாய் நகர்ந்து பேரூரானபின் நகரெனப்படும். நகர் என்பது முதனிலைத் தொழி லாகுபெயர்; நகரம் என்பது அம் சாரியைபெற்ற முதனிலைத் தொழிலாகு பெயராகவும் அம் விகுதிபெற்ற தொழிலாகு பெய ராகவுங் கருதப்படும். நகர்தலாவது பெயர்தல் அல்லது தள்ளுதல். மக்கள் நெருக்கம் பற்றி ஒரு மனையிலுள்ளார் நகர்ந்து புதுமனை புகுவதும் ஒரு தெருவிலுள்ளார் நகர்ந்து புதுத்தெரு புகுவதும் கண்கூடாகக் காண்கின்றோம். இங்ஙனமே ஓர் ஊரானது சிறிது சிறிதாய் நகர்ந்து நாளடைவில் நகராகின்றது.

பண்டைத் தமிழின்படி ஊர் நகரம் என்பன ஒருபொருட் சொற்கள். ஊர் என்னும் பெயர்க்கும் இதுவே காரணம். ஊர்தலும் நகர்தலும் (ஏறத்தாழ) விரைவளவில், ஒன்றே. முற்காலத்தில் மருதநிலத்தூர்களே ஊர்களெனப் பட்டன. குறிஞ்சி, முல்லை

பாலை நிலங்களிலுள்ள குறிச்சி, பாடி, பறந்தலைகளைவிட மருதநிலத் தூர்கள் மிகப் பெரியனவாயிருந்தன. வாணிகம்பற்றி நெய்தல் நிலத்துப் பட்டினங்களும் உழவுபற்றி மருதநிலத்தூர்களும் மிகச் சிறந்தனவும் பெரியனவுமான நகரங்களாயின. அவ்விருவகை நகரங்களிலும் வாணிகம் பற்றியும் உழவுபற்றியும் பலவகைக் கைத் தொழில்களும் சிறந்திருந்தன. பட்டினங்களையும் ஊர்களையுமே பண்டை மன்னரும் தத்தம் தலைநகராகக் கொண்டிருந்தார்கள். காவிரிப்பூம் பட்டினமும் கொற்கையும் நெய்தனிலத் தலைநகர்க ளாகவும், உறையூரும் மதுரையும் மருதநிலத் தலைநகர்களாகவும் இருந்தமை காண்க.

உழவு வாணிகம் என்னும் இரண்டினுள் உழவே தலைமை யானதாயும், உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாயும் வாணி கத்திற்குக் காரணமாயு மிருத்தலின், முதலாவது ஏற்பட்ட தொழில் உழவேயென்றும் முதலாவது நகராகியது மருதநிலத் தூரே என்றும் தெரிந்துகொள்க. பலநிலத்து மக்களும் தொழில் பற்றியும், பாதுகாப்புப்பற்றியும், செயப்படுபொருள்(Manufacture)களா லேற்பட்ட வசதிபற்றியும், வாணிகம் பற்றியும் ஊரையும் பட்டினத்தையும் அடுத்ததினால் அவை விரைந்து நகரும் மாநகரமாயின. ஊர் என்னும் பெயர் இக்காலத்தில் பலவகை யூர்களுக்கும் பொதுப்பெயராகவும், சிற்றூர் என்னும் பொருளில் சிறப்புப் பெயராகவும் வழங்குகின்றது ; நகரென்னும் பொருளில் வழங்குகின்றிலது.

பட்டிகளிலும் சிற்றூர்களிலுமிருந்த மக்களைவிடப் பட்டினங் களிலும் நகர்களிலுமிருந்த மக்களே நாகரிகமாயிருந்தனர். இக் காலத்திலும் பெரும்பான்மை அதுவே. மக்கட்பெருக்கால் நகரங் களில் வழக்குத் தீர்ப்பிற்கும் பொருட்காவலுக்கும் ஊராண்மை நாட்டாண்மை முதலிய அரசியல்களும், அவற்றின் சட்டங்களும், அவற்றை மீறியவழித் தண்டங்களும் ஏற்பட்டன. தண்டனைகட் கஞ்சி மக்கள் திருந்திய ஒழுக்கமுடையராயினர். பலவகைக் கைத்தொழிலால் பலவகைப் பொருள்களும் செய்யப்பட்டதி னால் வசதியாகவும் சிறப்பாகவும் வாழத்தொடங்கினர். சிறந்த பாத்திரங்களிற் சமைத்துண்ணவும் வசதியான வீடுகளில் வசிக்க வும், நெய்தவுடைகளை உடுக்கவும் தலைப்பட்டனர். நடையுடை

பாவனைகள் நாளடைவில் திருந்திவாலாயின. இங்ஙனமே நாகரிகமானது நகரங்களில் சிறிது சிறிதாய் வளர்ந்து முதிர்ச்சியடைந்தது. 'நகரகம்' என்னும் சொல் 'நகரிகம்', 'நாகரிகம்,' 'நாகரீகம்' என மருவி வரும்.

சிற்றூர்களிலும் பட்டிகளிலு மிருந்த மக்கள் நாகரிகமின்றி மிலேச்சராயும் முரடராயுமிருந்து வந்தனர். இக்காலத்திலும், நாகரிகமில்லாதவனைப் 'பட்டிக்காட்டான்' என்பது வழக்கம்.

ஆங்கிலத்திலும் நாகரிகத்தைக் குறிக்கும் Civilisation என்னும் சொல் இதே காரணத்தாற்றான் உண்டாயிருக்கின்றது. (Civitas)என்பது லத்தின் (Latin) மொழியில் நகர் அல்லது பட்டினம் (City) என்று பொருள்படும். அதிலிருந்தே Civilise என்னும் வினை யுண்டாகும். மரியாதையை அல்லது திருந்திய ஒழுக்கத்தை உணர்த்தும் Civility என்னும் சொல்லும் அதனின்றும் திரிந்ததே. Civil : having the refinement of city-bred people. Civil war: a war between citizens of the same state. City: a large town. L. civitas (Chamber's Etymological Dictionary).

நாகரிகமென்னும் சொல் நாகர் என்னும் பெயரினின்று வந்ததென்றும், நாகரென்பார் நாகரிகத்திற் சிறந்திருந்தவரென்றும் ஆயிரத்தெண்ணூறுட்டைமுற் றமிழர் (The Tamils 1800 years ago) என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளது.

நாகரென்பார் நாக நாடெனப்பட்ட கீழ்த்திசை நாடுகளில் நாகவணக்கம் கொண்டிருந்த மக்கள் வகுப்பாரே. நாகவணக்கமுடைமைபற்றி நாகரெனப்பட்டார். நாகருடைய நாடு நாக நாடெனப்பட்டது.

நாகம் என்பதும் நாகர் என்பதும் பாம்பின் பெயர்கள். நகர்வது நாகர். அது முதனிலை திரிந்த தொழிலாகு பெயர்; நாகர் என்பது நாகம் என மருவும். ஆங்கிலத்திலும் Snake என்பது இதே பொருள் பற்றியது.

Snake: A creeping animal; snican, to creep (Chambers' Etymological Dictionary).

நகர் நாகம் என்னும் தமிழ்ச் சொற்களே 'S' என்னும் முதல் எழுத்துப் பெற்று ஆங்கிலத்தில் வழங்குமென்க. அது முதற் குறைக்கு மாறுனதோர் முதல் விரிபாகும். அதை ஆங்கிலத்தில் prosthesis என்பர்.

நாகம் என்னும் சொல்லுக்கு மலையிலுள்ள தென்றும் மரத்திலுள்ள தென்றும் வடநூலார் பொருள் கூறுவது சிறிதும் பொருந்தாது.

கீழ்த்திசை நாடுகளில் பெரும்பாம்புகளிருந்தனவாக வான்மீகி ராமாயணக் கிட்கிந்தா காண்டத்தாலறியக் கிடக்கின்றது. இற்றைக்கும் கழிபெரு நச்சுப் பாம்புகள் தென் அமெரிக்காக் கண்டத்தி லுள்ளனவாகச் சொல்லப்படும். நாகத்தின் தீமைபற்றி அதைத் தெய்வமாக மக்கள் வணங்கி வந்தனர் என்க.

நாகத்தொடு பெயரொப்புமை பற்றி நாகரை நாகத்தலையும் மக (மாநட) வுடம்பும் பெற்ற ஒருவகை உயர்திணை வகுப்பாராகப் பிறழக் கருதுவர் சிலர்.

பர்மா, ஜாவா முதலிய தீவுகளும், ஆஸ்திரேலியா, அமெரிக்காவென்னும் கண்டங்களும், வங்காளக் குடாக்கடலில் அமிழ்ந்து போன நிலப்பாகங்களும் நாக நாடுகளாகும்.
மணிமேகலையில்,

"கீழ்நில மருங்கி னாகநாடாளும்"

"நாக நன்னாட்டு நானூறி யோசனை
வியன் பாதலத்து வீழ்ந்து கேடெய்தும்"

"நாக நாடு நடுக்கின்றாள் பலன்
வாகை வேலோன் வளைவணன்"

எனக் கீழ்த்திசை நாடுகள் பொதுவாகவும் சிறப்பாகவும் நாக நாடெனச் சுட்டப்பட்டன.

சாவகநாட்டுள்ள புண்ணியராசன் தலைநகர் நாகபுரமெனக் கூறப்பட்டுள்ளது.

கம்பராமாயணச் சுந்தரகாண்டத்தில்,

“ கீண்டது வேலைநன்னீர் கீழுறக் கிடந்தநாகர்
வேண்டிய வுலகமெங்கும் வெளிப்பட மணிகண்மின்ன
ஆண்டகை யதனைநோக்கி யரவினுக் கரசர்வாழ்வும்
காண்டகு தவத்தனானேன் யானெனக் கருத்துட்கொண்டான்”

என்னும் செய்யுளில் நாகநாடு குறிக்கப்பட்டுள்ளது. இதில் கீழென்பது கிழக்கு. இதைக் கடலின் அடிப்பாகமெனக் கொண்டு இடர்ப்படுவர் சிலர்.

அனுமான் கடலைத் தாவின வேகத்தினால் எழுந்த காற்று மோதுதலினாலே, கீழ்த் திசையில் பூமியின் வளைவான பாகத்தி லுள்ள கடல்நீர் விலகி, அதனால் முன்னம் மறைக்கப்பட்டு (அதற் கப்பால் கிழக்கே) இருந்த நிலப்பாகம் அல்லது நாகநாடு தோன் றிற்று என்பது இச்செய்யுளின் கருத்தாகும்.

பூமி உருண்டையாயிருத்தலால் கிழக்கே செல்லச்செல்லப் பூமியின் கீழ்பாகமாகும் அமெரிக்கா பூமிக்கு நேர் கீழாகும்; அதனால் கீழ்பூமி யெனப்படும். அது பூமியின் மேற்பரப்பின் வழியாய்ச் சென்றெய்தப்படுவதல்லது நிலத்தை யகழ்ந்தும் கட லின் மூழ்கியும் நேர் கீழாகச் சென்றெய்தப்படுவதன்று. மேற்கே மலைத்தொட ரிருந்தமையால் தமிழ்மக்கள் மேற்றிசையிற் பெரும் பாலும் சென்றிலர். கிழக்கே மலையின்றி யிருந்ததுடன் நிலத் தொடர்பும் நெடுந்தூர மிருந்ததாகத் தெரிகின்றது.

நாகநாட்டை யடுத்த கீழ்கரையூர்கள் நாகூர், நாகப்பட்டின மெனப் பெயர்பெற்றிருக்கின்றன.

நாகரில் நாகரிகரும் அநாகரிகருமாக இருவகுப்பார் இருந் திருக்கின்றனர். நாகரிக வகுப்பைச் சேர்ந்த கன்னிகைகளையே அர்ச்சுனனும் சோழனும் மணந்ததாகப் பாரதமும் மணிமேகலை யுங் கூறும்.

மணிமேகலை, ஆதிரை பிச்சையிட்ட காதையுள்,

“ சாதுவ னென்போன் தகவில னாகி
. . . . . . . . . . . . .
வங்கம் போகும் வாணிகர் தம்முடன்

தங்கா வேட்கையிற் றனுஞ் செல்வுழி
நளியிரு முந்நீர் வளிகலன் வெளவ

. . . . . . . . . . . . .

நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மைய னுயினன்

. . . . . . . . . . . . . .

ஓங்குயர் பிறங்க லொருமர நீழல்
தூஞ்சுதுயில் கொள்ளச் சூர்மலை வாழு
நக்க சாரணர் நயமிலர் தோன்றிப்
பக்கஞ் சேர்ந்து பரிபுலம் பினனிவன்
றானே தமியன் வந்தன னளியன்
ஊனுடை யிவ்வுடம் புணவென் றெழுப்பலும்

. . . . . . . . . . . . . .

கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்
வெள்ளென் புணங்கலும் விரவிய விருக்கையில்
எண்குதன் பிணவோ டிருந்தது போலப்
பெண்டுட னிருந்த பெற்றி நோக்கி''

என்னும் அடிகளால் நாகரில் ஒரு வகுப்பார் அம்மணாயிருந்தா ரென்றும் மக்களைக் கொன்று தின்றாரென்றும் அறியக் கிடக்கின் றது. ஆதலால் நாகரிகம் என்னும் சொல் நாகர் என்பதினின்றும் வந்ததன்று என்றும் நாகரென்பார் கீழ்த்திசை நாடுகள் பலவற்றி லுமுள்ள மக்கட்கூட்டத்தாரே என்றும், அவருட் சிலர் நாகரிகரா யும் சிலர் அநாகரிகராயு மிருந்தனரென்றும் அறிந்து கொள்க.

---

ஔவையார்

## * திருவெண்பாப் பொருள் விளக்கம்

"உலகமும் பல்லுயிரு மொன்றி நிறைந்தோங்கி
யிலகுஞ் சிவனெம் மிறை."

அவ்விறைவன் நிறுத்தியருளிய இந்நிலவுலகத்தில், எந்நாட்டி னுஞ் சிறந்து பொன்னாட்டினு முயர்ந்த நன்னா டிதுவென்று

* இஃது இராமநாதபுரம் திரு. பாஸ்கரசேதுபதி அவர்கள் முன் னிலையில், சாமக்குளம் வெங்கடரமணதாஸர் என்னும் திரு. சுப்பிரமணிய சர்மா அவர்கள் செய்த சொற்பொழிவின் ஒரு பகுதியாகும்.

பன்னுவலர் புகழும் திருப்பாண்டித் தென்னாட்டு மன்னர் சிகாமணியாகிய, ஸ்ரீமத் பாஸ்கர சேதுபதி மகாராஜா அவர்கள் கனசமுகத்தில், பலகலைகளும் நிலைகண்டுணர்ந்த பண்டிதர் பலர் நிறைந்த மகாசபையில் இச் சிறியேனை ஒரு சித்தாந்த சைவப்பிரசங்கம் புரியுமாறு பணித்தருளினார்கள். மாங்குயிலின் தீங்குரல் கேட்டு மகிழ்ந்திருக்கும் திருச்செவிகள் காகங் கரையு மொலியுங் கேட்டல் போல, மெய்நிலைகண்ட மேதகு புலவர் செய்திடும் உபந்நியாஸங்கள்கேட்டு மகிழ்ந்திருக்கும் பெரியோர் உய் நெறியறியாப் பொய்செறி சிறியேன் பெய்திடும் உபந்நியாஸமுங்கேட்க விரும்புதல் எற்குமோர் நெறியேயாம். அது நிற்க; திருஞானசம்பந்தர், வாகீசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் பரமாசாரியசுவாமிகள் நால்வரும் ஏனைய உண்மை நாயன்மார்களுந் திருவாய்மலர்ந்த அருட்பாக்களெனப்படும் தேவார திருவாசக மாதிகளில் ஒரோவொன்றை யெடுத்துக்கொண்டு அதன் பொருள் சிறிது விளக்குதற்கோ புழுத்த நாயினுங் கடையேனாகிய சிறியேன் அத்துணை யாற்றல் பெற்றிலேன். ஆதலின் பூலோக சரசுவதி யென்று மேலோராற் புகழப்பெற்றுச் சிவாநுபவ முற்றிருந்த ஔவையாரருளிச்செய்த பல நூல்களுள் ஒரு நூலிலுள்ள ஒரு வெண்பாவை யெடுத்து அதன் பொருளைச் சிற்றறிவுக் கெட்டியவாறு சிறிது விளக்கத் துணிவுற்றேன். அது வருமாறு:—

வெண்பா.

சிவாய நமவென்று சிந்தித் திருப்பார்க்
கபாய மொருநாளு மில்லை—யுபாய
மிதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்.

இத் திருவெண்பாவின் முதற்கண் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைக் குறிப்பிட்டருளினார் ஔவையார். அது, தூலபஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம் என மூன்றிறப்படும். அவை பீஜங்களது சேர்க்கைகளால் ஒரெழுத்துமுதல் பதினாறெழுத்துக்கள் வரையில் தொகை யேறியுங் குறைந்தும் பல திறத்தனவாக விளங்கும்.

"அஞ்செழுத்து மெட்டெழுத்தும் ஆறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்தும்"

என்றபடி பல திறப்பட்டு விளங்குமவை யெல்லாம் பொதுவில் ஸ்ரீ பஞ்சாக்கரமென்றே யழைக்கப்படும். மற்றிதன் றிறமெல்லாம் "எண்ணிலி யூழி தவஞ்செய்திங் கீசனை—யுண்ணினைவு பெற்ற துணர்வு"—என்றபடி யெண்ணிறந்த பிறவிதோறும் சோபான முறையாய் அடிபட்டு வந்த புண்ணிய விசேடத்தால் ஒரு ஜன்மத்தில் இருவினையொத்து மலபரிபாக மெய்திச் சத்திபதிவுற்றுப் பிறவியை யஞ்சி விடுபேறு காதலித்துச் சித்தாந்த சைவநெறி கடைப்பிடித்துச் சற்குரு சந்நிதி யடைந்து சமயவிசேட நிருவாணமென்னும் சம்ஸ்காரங்கள்பெற்று அருள்வழி நிற்கும் பெருந்தகை வாய்ந்த சற்சிடர்கட்கு அதிகாரானுகுணமாக அவ்வாசிரியனால் அறிவுறுக்கப்படவேண்டியதொரு பரமரகசிய மெய்ந்நெறி யாதலின், அதனைத் தெளிந்த பெரியோர் வெளிப்பட விள்ளார். விள்ளுதலிழுக்காம். விள்ளினும் பக்குவால்லாதார்க்கு அது விளங்கிப் பயன்றருமாறுமில்லை. இச் சித்தாந்த சைவப்பேற்றி னருமையைப்

"புறச்சமய நெறி நின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
. . . . . . .
. . . . சென்றாற்சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்"

எனவரும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாற் காண்க.

இங்ஙனம் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைக் குறித்தெடுத்துக்கொண்ட ஔவையார் "சிவாய நம வென்று" என்றார். "என்று" என நிற்கும் இவ்வெச்சம் என்று கனித்து, என்று செபித்து, என்று உச்சரித்து என்னும் பொருளைப் பயக்கும். இது வாக்குகளின் றொழில். வாக்குகளாவன:-வைகரி; மத்திமை; பைசந்தி; சூக்குமை யென நாற்றிறப்படுவதாம். இவை முறையே நாவுமூலம், கண்டம், இதயம், நாபி என்னும் தானங்களைக் கொண்டு விளங்கும். இவை சுத்த மாயையின் காரியம். இவற்றி னியல்பெல்லாம் மெய்கண்ட சாத்திரங்களுள் விசாரித்துத்தெளிக. ஈண்டு விரிக்கிற் பெருகும்.

மேல், சிவாயநம வென்று "சிந்தித்து" என்றார். சிந்தித்தல் மனத்தின் றொழில், (மனத்துக்கும் சித்தத்திற்கும் வேறுபாடு சிறிதாதல்பற்றி அவையிரண்டையு மொன்றாகக் கொண்டு அந்தக்கரணம் மூன்றே யெனக் கூறும் சில தத்துவ நூல்கள்.) ஈண்டுச் சிந்தித்தலாவது அங்ஙனங் கணிக்கப்படும் ஸ்ரீ பஞ்சாக்கரத்தின் பொருளைச் சிந்தித்து என்பதாம். பொருளாவது, பதி பசு பாசமென்னும் முப்பொருளும் அதனு ளடங்கி நிற்கும் நிலையைச் சிந்தித்து, அதாவது, சிவம், சத்தி, ஆன்மா, திரோதம், மலம் என்னும் ஐம்பொருளும் முறையே திருவெழுத்தைந்தில் விளங்கிநிற்கும் அந்நிலையைச் சிந்தித்து, "தோற்றந் துடியதனில்" எனவும், "சேர்க்குந் துடிசிகரம்" எனவும் வரும் பிரமாணங்களின்படி இறைவனது திருவுருவமும், சிருட்டி முதலிய ஐந்தொழிலும், அயன் முதலிய ஐங்கர்த்தாக்களும், ஈசானமுதலிய ஐம்மனுக்களும், ஈசானிமுதலிய ஐஞ்சத்திகளும், அவ்வைந்தெழுத்தாலமைந்த அந்நிலையைச் சிந்தித்து என்க. விரிக்கிற் பெருகும்.

மேல் "இருப்பார்க்கு" என்றார். ஈண்டிருத்தலாவது அங்ஙனம் சிந்தித்துத் தெளிந்த அந்நிலையைச் சாதித்து நிற்றலாம். அருள்வழி நிற்றல், இறைபணி நிற்றல், தானற நிற்றல், சிவமாய் நிற்றல், ஞேயத்தழுந்தல் என்பனவாதி பல வாசகங்களால் இறைவனூல்களில் உணர்த்தப்படும் மெய்ஞ்ஞான நிஷ்டையாகிய சமாதிநிலை யிதுவே யெனக் காட்டுவார் "இருத்தல்" என்னு மொரு சொல்லாற் கூறினர். உச்சிப் பொழுதி னேர்பட்ட படிகம் பிறிதொன்றைக் கவாது அக்கதிரொளியே கவர்ந்து அதுவாய் விளங்கு மதுபோல், கண், படிகம், ஆகாசம்போலச் சார்ந்த தன்வண்ணமாம் உயிர். இவ்வைந்தெழுத்தைச் சாதித்துநிற்கு நிலையில் சிவமுமருளு மோர்பாலும், மலமுந் திரோதமு மோர்பாலும் முன் பின்னாகச் சூழ்ந்து நிற்க நடுநின்ற யகாரமாகிய ஆன்மா மலத்தைப் பற்றாது அருளைப்பற்றி அவ்வருள் தாரகமாகச் சென்று பொருளோடுகூடி அதுவாய் விளங்கி நிற்கும் அவ் வத்துவிதநிலை இதுவேயாம். "வெளியே புறப்பட்டு மெய்யருளாம் தாயுடன் சென்று தாதையைக் கூடிப் பின் றாயை மறந் தேயுமதே நிஷ்டையென்றானெழிற் கச்சியே கம்பனே." எனப் பட்டினத்துப்பிள்ளையார் அருளிச்செய்ததுங் காண்க. அத்துவிதமென்பதனுள் அகரம் இன்மை அன்மை மறுதலையென்னும்

முப்பொருள் பயக்குமன்றே! அவற்று ளென்னும் பெயர்மேல் வந்த நகரம் அன்மைப்பொருள் மாத்திரையே யுணர்த்திப் பொது வில் நிற்பதன்றி வினைப் பெயர்மேல் வந்த நகரம்போல இன்மை மறுதலைப் பொருள்க ளுணர்த்தல் வழக்கின்க ணின்மையான் "அப்பிராமணன்" என்பதுபோல் அன்மைப் பொருளே யாண் டுப் பொருந்தற்பாலதாம். அங்ஙனமாக இன்மைப் பொருளே யவ்வகரத்திற்கு வடமொழியியலால் நாட்டப்படுவ தென்றும், அன்மைப் பொருள்கோடல் நவீனர் சிலரது போலிவழக்கென் றும் இக்கால வடமொழிப்புலவர் சிலர் மயங்கிக் கூறுவர். அவர் மெய்கண்டான் நெறியை விரோதித்துப் பொய்கொண்டிழியும் மாயாவாதப் புறச்சமயி யாகலின் அன்னோர் பொருள் எம்பால் மெய்யாதலின்றித் தூரம்போய்த் துச்சமாய் விடுமென்க. இது பற்றியன்றே "பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித, மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ?" என்றார் தாயு மானப் பெரியாரும்! "வேதாதிகாரம் பிராமணருக்கே "யன்றி" சத்திரிய வைசியருக்குமுண்டு." "வேதாதிகாரம் சூத்திருக் "கின்றி" உயர்ந்த மூன்று வருணத்தார்க்குண்டு." இந்த இரண்டு வாக்கியங்களின் மத்தியில் நிற்கும் அன்றி, இன்றி என்னும் பதங் களின் அர்த்தவேற்றுமை போலவே அத்துவைதச்சொல்லின் அகரத்திற்கு அன்மைப் பொருள் இன்மைப் பொருள் வேறு பாடுண்மை யறிக.

"இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே
னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந்
தொன்றும் திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே."

என்று வாதவூர்ப்பரமாசாரியர் அருளிய அம்மெய்ந்நிலையே சித் தாந்த சைவத்தாற் பெறப்படும் புனிதாத்துவித நிலையென்றுணர்க. தானற நிற்கு மத்துவித நிலையிஃதென நன்கு விளக்குதற்கன்றே சிவஞானபோதச் சிற்றுரையில்

"நானவனென் றெண்ணிவர்க்கு நாடுமுள முண்டாத
லானெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானு மிறை"

என்னும் வெண்பாப் பொருளில் நாடுமுள முள்வழித்தா னிலனாத லும் அஃதில்வழித் தானுளனாதலும் யாங்ஙனம் பெறுதுமெனிற் காட்டுதும் :—தூல வொளியாகிய கண்ணொளியும் சூக்குமவொளி யாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்துநிற்கு நிலையை உற்றுநோக்க வல்லார்க்குப் பிரித்தறியவாராமையின், விளக் கொளியாய்க் காணுங்காற் காட்டுந் தன்மையே முனைத்துத் தோன்றுமாகலான் அவ்வழிக் கண்ணொளியிருந்து மில்லைத் தானே; அன்றிக் கண்ணொளியாய்க் காணுங்காற் காணுந் தன்மையே முனைத்துத் தோன்றுமாதலால் அவ்வழி விளக் கொளியிருந்து மில்லைத்தானே; இனி இது கண்ணொளி இது விளக் கொளியெனப் பகுத்துக் காணப்புகினும் காணுந்தன்மையே முற் படத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளி திரிவுபுலனாய் காட் சிப் படுவதல்லது தெளிவு புலனாய் காட்சிப்படுமா றில்லை. இனி யாது திரிவுக்காட்சி? யாது தெளிவுக் காட்சி? யெனிற் கூறுதும். அங்ஙனம் கலந்து நிற்புழியும் இது விளக்கொளி, இது கதிரொளி, இது மதியினொளியென அவ்வப்பெற்றியவேயாய்க் காணுங்காட்சி தெளிவுக்காட்சி யெனவும் அங்ஙனமன்றி அவற்றினேடொப்பக் கண்ணொளியை வேறு காண்டல் திரிவுக்காட்சி யெனவும் கண் கூடாக அறியக் கிடத்தலின் பொருளினும் இவ்வாறுய்த்துணர்ந்து கொள்க. அற்றேல், கதிர்முன் விளக்குப்போல விளக்கொளிமுன் கண்ணொளி சத்தி மடங்கிப்போதலின் அஃதவைபோலக் காட்சிப் புலனாகாதாயிற் றென்னுமோவெனின் ; என்னும்: என்னை ? கண் ணொளி சத்திமடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனாதல் பிறிதோராற்றாற் பெறப்படாமையின்; அற்றேல், மின்மினித் துணை யேனும் தானென விளங்கு மியல்பில்லாத கண்ணுக் கொளிக் குணமுண்டென்பதற்குப் பிரமாணமென்னையோ வெனின்,— அறியாது கடாயினாய். ஆகாயத்தின் கண்ணதாகிய சத்தகுணம் வியஞ்சகத்தானன்றித் தினைத்துணையும் தானே விளங்கு மாறின் மையின் அதுபற்றி எதிரொலிவடிவாகிய அவ்வோசையை காயத் தின் குணமன்று வியஞ்சகப்பொருளின் குணமேயென்பார் யாரு

மில்லை. அதுபோலக் கண்ணொளியும் தன்னை விளக்கும் வியஞ்சக முள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்திரையே பிறிதில்லை யென்றுணர்க," என்றிங்ஙன மருளிச்செய்தார் திராவிடமகாபா ஷியகர்த்தாவாகிய நுறைச் சிவஞானயோகிகள். இவ்வுண்மை ஒரு சிறிதும் உணரப்பெறாது ஊகமில்லாப் பசுஞானிகள் சிலர் பிரம்மவித்தியாப் பத்திரிகை முதலியவற்றில் கதிரொளி யொன்று தானே கட்பொறியிற்றாக்கி எதிரோடி பல்பொருள்களைக் காண்ப தன்றிக் கண்ணுக் கெனவோ ரொளியில்லை யென்று வம்பளப்பா ராயினர். கண், ஒளியோடு சார்ந்து ஒளியாய்க் காண்டலும் இரு ளோடு சார்ந்து இருளாய் நிற்றலும் நாம் கண்ட அநுபவமாம். அஃது அவ்விரண்டுமாகாத வோரியல்பிற்றாகலான். வியஞ்சகத் தால் விளங்கிக்காணும் அக்கண்ணினது சத்தியையோ யாமிங்குக் கண்ணொளி யென்கின்றாம். காண்பது கதிரொளியேயன்றிக் கண் ணொளியல்லவெனின், நள்ளிருள் செறிந்த நடுச்சாமத்தில் நெடுந் தூரத்துள்ளவோர் மலையின் மீதெரியும் விளக்குக் கண்ணிற்குத் தோன்றுதலும் அவ்விளக்குக்கும் கண்ணிற்கு மிடையிலுள்ள பொருள்களிலொன்றுந் தோன்றாது அந்தகாரமே தோன்றுதலும் என்னையோவென்று கடாவி மறுக்க. விரிக்கிற் பெருகும். இஃது இங்ஙனம் நிற்க.

(தொடரும்)

# அறம்

[திரு. சேலை சகாதேவ முதலியார்]

அறம் என்னுந் தமிழ்மொழிக்குத் தருமம் என்னும் வட மொழி நேரொத்த தாகும். இரவில் நகர்சோதனை வருவது இராஜ தரும மென்புழித் தருமம் என்பது கடமையைக் குறிக்கின்றது எனவே அறமாவது கடமை என்பது பெற்றாம். இச்சிறந்த மாண்டார் மருவிய, உயிர்க்குறுதி பயக்கும் நல்வினையாகிய அறத்தை ஒல்லும் வகையால் ஓயாமல் அஃது எய்து மிடத்தா னெல்லாம் இயற்றுதல் வேண்டும். 'சிறப்பீனுஞ் செல்வமு மீனும்,' என்றும்; 'அறத்தினூஉங் காக்கமு மில்லை,' என்றும்; 'அன்ற றிவா மென்னா தறஞ்செய்க,' என்றும்; 'அறத்தான் வருவதே இன்பம்,' என்றும், 'செயற்பால தோரு மறனே,' என்றும்;

'அறத்தை ஓவாது நின்றுஞற்றி வாழ்தி,' என்றும்; 'வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம் வருங்காற் பரிவதிலர்,' என்றும் பலபட இவ்வற மென்னும் மக்கட் கடமையைப் பற்றிப் பெரியோர் வலியுறுத்திக் கூறி யிருக்கின்றனர். இக்கட்டளைகளின் உட்கருத்தைத் தெள்ளத் தெளியத் தெரிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

"தன்னாற் றன்பரிசனத்தால் ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரால் உயிர்தம்மால் ஆனபய மைந்துந்தீர்த்து அறங்காத்துக்" குடியோம்பி ஆணை செலுத்தும் அரசனும்; பருவகால மறிந்து உழுது எருவிட்டு நீர் பாய்ச்சிக் காத்தோம்பிய நிலத்தான்வரும் பயனைக் கொண்டு ஐம்புலத்தார்க்கு மளித்து இல்லறத்தை இனிது நடாத்தும் வேளாளனும்; காலைமுதன் மாலைவரைக் கரவாமல் உடம்பாலுண்மையா யுழைத்துத் தக்கபடி ஊதியம் பெற்று உற்றாருடனுண் டுடுத்துக் கவலையின்றிக் காலங் கழிக்குங் கூலியாளனும் ஆகிய இவர்களெல்லோரும் தத்தம் அறத்தை அழகு பெறச்செய்பவரே யாவர்.

மேலும், கற்கும் மாணவர்க்கு இன்னின்ன பொருளை இன்னின்னவாறு கற்பிக்க வேண்டுமென முன்னமேயே வரையறுத்து ஆராய்ந்தெடுத்துக் கல்வியறிவை யூட்டுங் கணக்காயனும்; தன் வேலையில் வெறுப்பின்றி ஊக்கத்துடன் உழைத்து அதனைக் குறைவின்றி நிறைவுபெறச் செய்து முடிக்கும் உத்தியோகத்தனும்; தன் எஜமானன் கட்டளைப்படி யமைந்து இட்ட வேலைகளை எச்சமின்றிச் செய்து காட்டும் ஊழியனும் அவ்வாறே அறத்தை அழகு பெறச் செய்பவரே யாவர்.

இன்னுஞ் சொற்படியமையுங் கற்புடை மனைவியும், மூவா மருந்தாம் எவா மக்களும், வறுமையிற் செம்மை காட்டும் வறுமையாளனும் அதுபோன்றே அறத்தை அழகுபெறச் செய்பவரே யாவர்.

இவ்வறத்தை மக்கள் மாசிலா மனத்தராய், அழுக்கா றவா வெகுளி இன்னாச் சொற் கடிந்து, வீழ்நாட் படாமே நன்றாற்றின், அவர்கள் அரும்பெறல் யாக்கையைப் பெற்றதின் பயனை அடைந்தவராவர்; அவ்வாறு அடையும் இன்பமே உண்மை இன்பமாகும்.

இவ்வுலகின்கண் தத்தமக் குரிய கடமைகளைச் செய்து வருதல் உயர்வு தாழ்வென்ற வேறுபாடின்றி மக்கள் யாவர்க்குமே ஒருபடித்தாக ஏற்பட்டதாகும். கடமை யென்பதனுள் உயர்வு தாழ்வு உண்டென்று கற்பிப்பாரைக் கண்டிலேம். அரசனும், நியாயாதிபதியும், நியாயவாதியும், உழவனும், உத்தியோகத்தனும் ஊழியனும் தங்கள் தங்கள் நிலைமைகட்குத் தக்கவாறு தத்தம் வேலைகளைச் செய்து தங் கடமைகளை முடிக்கின்றார்க ளாகையால் அவர்களுள் அவரவர்கள் கடமை கருதி ஏற்றத்தாழ்வு உண்டெனக் கோடல் ஏலாததாகும்.

'கல்வி,' 'கல்லாமை,' என்றாற்போன்று மக்கட் கடமைகளையெல்லாம், உடன்பாட்டானும் எதிர்மறையானும் வகுத்துக் காட்டும் வள்ளுவப் பெருமான், தந் திருக்குறள் நூலின்கண் 'அறன் வலியுறுத்தல்,' என்னுமோ ரதிகாரத்தைப் பாயிரமாக அமைத்து வைத்ததன் காரணம், அவைகளெல்லாம் அறத்தின் வகைகளே யென்றறிவிப்பான் பொருட்டே யாம். நாலடி பாகுபாடு செய்த முனிவரும், செல்வம், இளமை, யாக்கை யாகிய இவைகளின் நிலையாமையை உய்த்துணர்ந்து நாளை நாளை யென்னாது இன்றே தத்தமது கடமைகளைச் செய்து முடிக்கும் மக்களே இம்மை மறுமை வீட்டின்பங்களை எய்துதற் குரியா ரென்று உணர்த்துவான் 'அறன் வலியுறுத்தல்' என்னும் அதிகாரத்தை அவற்றின் பின்னும் ஏனையவற்றின் முன்னும் இசைத்து வைத்தனர் என்பதையும் நோக்கி அறத்தின் அருமையை அறிக. இக்கருத்துப்பற்றியே ஔவைப் பிராட்டியாரும் ஆத்திசூடி நூலின் முகப்பில் 'அறஞ்செய விரும்பு' என்றோதினார், இது தொகையும் மற்றவை வகையுமாமென உணர்த்துதற்கு. 'செய்' என்று கட்டளையிடாமல், 'விரும்பு' என்றது எற்றுக்கெனின் செயலுக்கு விருப்பமே காரணமாதலா லென்க; என்னை, விருப்பமின்றிச் செயலில்லையாதலின். ஆத்திசூடி நடுவண் 'அறனை மறவேல்,' என்றாராலோ வெனின், அது சிங்க நோக்காக அவ்வறத்தைப் பின்னும் வலியுறுத்தற் கென்க.

ஆசானைப் பேணிப் பாடங்கேட்டு உளத்தமைத்துக் கல்வியில் தேர்ச்சி யடைதல் மாணவர் கடமை. கற்போர்க்குக் கல்வியூட்டி அவர்களை நன்னெறி யுய்ப்பது ஆசிரியர் கடமை. கல்விச்சாலை

முதலிய நாட்டுக்கு நல்லன பயக்கும் அறச்சாலைகளை நிறுவி நடாத்தி வைப்பது பெருஞ்செல்வர்தங் கடமை. அவ்வாறன்றி என்பினுற் பிறர்க்குரியாராய்த் தம்மாலானவற்றை இயன்றவளவு கரவாது வேண்டுமிடத்துச் செய்வது பொதுவாக யாவர்க்கும், சிறப்பாக ஏழைக்கும் உரிய கடமை. தம்பொருள் போற் பிறர் பொருளையும் ஒக்க எண்ணுவது வணிகர்தம் கடமை. கடன் கொடாதும் கோடாதும் பெற்றூர் உற்றூரைப் பேணுவதும், அதற்குமேற் கூடின் உறவினர்க்கு உதவி புரிதலும், அதன் மேலுங் கூடுமாயின் நாட்டார் தமக்கும் வேண்டுவன புரிதலும் நடுத்தர மக்களின் கடமை.

இவ்வாறன்றிக் கற்கு மாணவன் எற்போற்கிட முயல்வதும்; கல்விச்சாலை யாசிரியன் ஏனைய வழிகளிற் றலையிட்டுக் கொண்டு நாட்டுக்கு நன்மை செய்வான்புகுதலும்; இலட்சாதிபதியாயுள்ளவன் பசுவிற்கு வாயுறை யளித்துச் செய்த அறமே போதுமெனத் தன்னைத்தானே புகழ்ந்து கோடலும்; வறுமையாளன் பிறர்பாற் சென்றிரந்து கோவில் கட்டவும் குளந் தொடவு முற்படுதலும்; வேளாளனென்பான் பருவத்தே பயிர் செய்யாது பிற தொழின்மேற் செல்லுதலும்; ஊதியத்துக் கென்று உத்தியோகஞ் செய்வோன் தன் தொழிலைக் கருத்தாகச் செய்யாது வீணைசை மேற்கொண்டு வெவ்வேறு வேலைகளிற் றன்னைப் புகுத்திக் கொள்வதும் அறத்தின்பாற் படாவாம்.

உடம்பில் உரமிருந்தும் ஊர் சுற்றிச் சோம்பேறிகளாய் உலகை ஏமாற்றப் பற்பல வஞ்சனை வேடங்கள் தரித்துவருபவர்க்குப் பத்தியுடன் பொருளோ உண்டியோ உதவுவதும்; உடம்பினுல் உழைத்துத் தன்னைத்தான் காப்பாற்றிக்கொள்ள வழிவகையறியாதவனும், தாய் தந்தையர் தேடிவைத்த பொருளைக்கொண்டு ஆடம்பரத்துடன் போலியாண்மை காட்டிப் பொழுதுபோக்குபவனுமாகிய ஒருவனுக்குக் கன்னிகையைத் தானமாகக் கொடுத்துக் கலியாணம் செய்துவைப்பதும்; கூன் குருடு முடங்கட்கும், தீராநோயாளருக்கும் கை நீட்டாது, வாகனங்களுடன் வாழும் செல்வந்தர்கட்கு விருந்திட்டு மகிழ்வதும் அந்தோ! அறமே ஆகமாட்டா.

உலகின்கண் மக்கள் அறம் என்பதன் உண்மைப் பொருளை ஓர்ந்துணரமாட்டாது, ஈகை யொன்றே அறமெனக்கொண்டு கண்டவர்களுக்கெல்லாம் காசு கொடுத்தும், உண்டியளித்தும் பெரும்புண்ணியஞ் செய்துவிட்டவர்களாகத் தங்களை எண்ணித் தருக்கி மகிழ்ச்சியடைகின்றனர்; இன்னுந் தலங்கள்தோறுஞ் சென்று நூற்றுக் கணக்கான சோம்பேறிகளை வலிய அழைத்து, அறுசுவை யுண்டி யளித்து அன்னதானத்தைச் சிறக்கச் செய்தவர்களாகத் தங்களை மதித்து இம்மை மறுமைகளில் இன்பமெய்த எதிர்பார்க்கின்றனர். போனகமென்பது தானுழந்துண்டலன்றோ? ஈகை யென்பது மக்கள் செய்யவேண்டிய கடமைகளிலொன்று தானே? அதனைத் தக்க விடங்கண் டியற்றுவதே அறமாமென்க. பகுத்தறிவின்றிச் செய்யும் ஈகைதானும் மறத்தின்கட் சேருமே யன்றி அறத்தின்பாற் படாது.

ஐயமிட்டுண் என்று அறம் போதிக்க வந்த ஔவையார் 'ஏற்பதிகழ்ச்சி' எனச் சொற்றதன் காரணத்தை உய்த்து நோக்கின் முன்னது பொருளுடையார்க்கும் பின்னது சோம்பேறிகட்கும் சொல்லியவாறும். எனவே, ஏற்கத்தக்க எளிமை யுடையோர்க்கே ஐயமிட்டுண்ண வேண்டுமென்பது போதரும். அவ்வாறு பகுத்தறிந்து ஈயாதவன் அறஞ்செய்தவனுகான். வயிற்றுக்கு இரந்துண்பதும், இரக்கத்தகாதவனுக்கு ஈத்துண்பதும் அறமாகமாட்டாவென அறைந்து கூறுதல் அறிஞர் ஒவ்வொருவருக்கும் கடமையாகும்.

---

## குன்றத்தூர்

(திரு. C. M. இராமச்சந்திர செட்டியார் அவர்கள், B.A., B.L.)

நற்றொண்டை வளநாட்டு நல்வளங்கள் எழிலனைத்தும்
பொற்றொண்டை அருண்மொழியார் பொலிவுடனே புகன்றனரால்
மற்றொன்றும் நினைவுதிரேல் மகிழ்வுடனே குன்றத்தூர்ப்
பற்றின்றே வந்தடைமின் பருகிடுவீர் அதனெழிலே. 1

சிறுகுன்றே இதுவெனினும் சீர்நாட்டு வளமெல்லாம்
குறுகிடுமோர் சுவரிடத்தே குறித்துளதாம் ஓவியம்போல்
பெருகிடுமே கண்முன்பால் பெரிதுவந்து நோக்கிடிலே
நறுமணஞ்சேர் வளமெல்லாம் நாட்டிவிடும் நெஞ்சகத்தே. 2

குன்றகத்தே விளையாடிக் குதூகலிக்கும் குமரேசர்
நின்றகமாய் இக்குன்றில் நிலையுறுவார் அதனாலே
அன்றுமுதல் இன்றுவரை அடித்தூரும் இதன்பெயரால்
குன்றத்தூர் எனப்பெயரும் கொள்ளுவதும் வியப்பலதே 3

தீம்புலவர் இங்குறலாம் திணைமயக்கம் கண்டிடவே
ஓம்பிடும் சீர் பசுஞ்சாலி உயர்வயல்கள் பரந்திலங்கும்
ஆம்பலுடன் வெண்கமலம் அலர்ந்திருக்கும் குளங்களிடை
வேம்புகளும் ஆலினமும் விரிந்தளிக்கும் குளிர்நிழலே. 4

அடுத்தடுத்தே ஆங்காங்கும் அரும்முடிகள் வெண்மையதாய்
படுத்திருக்கும் நீனிறத்துப் பலமலைகள் சூழ்ந்தொளிரும்
எடுத்திடவே காண்பிக்கும் எழின்முடிகள் ஈசற்கே
கொடுத்திடும்சீர் புகழ்வீசும் கோவில்கள் ஆமன்றே. 5

அடிவாரத் தருகினிலே அரியவனும் அமர்ந்திருப்பான்
படியாரும் அளக்ககிலாப் பண்பினிலே அமைந்திருப்பான்
கொடியேதும் பறக்ககிலாக் குணம்பெற்றே அரனரின்
செடியேறும் கோவிலுமே சேர்ந்துளதாம் அதனருகே. 6

வடமேற்பால் கொண்லடைகட்டி வேளாளர் வளவுடைய
தடமாரும் வீதியிலே தனித்துளதோர் ஆலயமே
நடமாடும் பெருமானின் நல்லடியார் சரிதமவை
திடமாக அளித்ததிருச் சேக்கிழாரங் குள்ளனரே. 7

அதன்வடபால் அமைந்துளதாம் அருங்குளமொன் றருள்மொழியார்
பதம்வணங்கும் அவர்தம்பி பாலருவா யாரமென்போர்
இதம்புரியும் எண்ணமதில் இதைத்தொட்டார் இன்றைக்கும்
விதம்விதமாய் வெண்கமலம் விரித்திருக்கும் வியப்புடைத்தாம். 8

இற்றையநாள் இவ்வினிய இடத்தினையே நத்தமெனப்
பெற்றுளதாம் பெயராலே பெயரிடுவர் இதன் வடபால்
சற்றேகில் குளிர்திரைசேர் தடாகத்தின் அருகினிலே
புற்றிடத்தார் நாகேசர் புகழ்கோயில் ஒன்றுளதே. 9

சேக்கிழார்தாம் உலகுய்யத் திருத்தொண்டர் சரிதமதை
ஆக்கியபின் இங்கமர்ந்தே அரும்பணிகள் செய்திடவே
ஊக்கியதும் இதுவாகும், உலகிரும் மகிழ்வுறவே
நோக்கியதை அணுகுவிரேல் நுவல்வீரே அதன்பெருமை. 10

# துறையூர்—தமிழர் மகாநாடு

## திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் வரவேற்புரையின் சில பகுதிகள்.

---

### தமிழர் மாண்பு

பண்டைக்காலம் முதல் நாகரிகத்தின் உயரிய நிலையை அடைந்த தேசங்களின் சரித நூல்களை நன்கு ஆராய்ந்தவர் மொழிமதுகையில் தலைசிறந்தகாலை நாடுகள் உயர்நிலையெய்தவும், மொழிவலம் குன்றியகாலை நாடுகள் கீழ்நிலையெய்தவும் காண்பர். பாபிலோனியர், எகுபதியர், ஈபுரூவர், யவனர், உரோமர் ஆகிய மக்களின் தலையெடுப்பும், வீழ்ச்சியும் இவ்வுண்மையினை நன்கு தெரிக்கும். இற்றை நாளினும் எழுத்து வழக்கற்ற மக்கள் நாகரிகத்தின் கீழ்த்தரத்தில் தாழ்வுற்றிருப்பதும் மொழிவலத்தில் உயர உயர நாகரிகத்தின் மேற்றரத்தில் உயர்வதும் கண்கூடு. கலை நூற்புலமையில் மிகச் சிறந்தவர் உவந்தளிக்கும் வாழ்வன்றோ அரசரின் கொற்றம்! நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்களையும் அவற்றோடு தொடர்புற்றிருக்கும் பல திறத்தனவாகிய சக்திகளையும் நமக்கு அடிமையாக்கி நமது குற்றேவல்களைப் புரியச் செய்வது புலமைமிக்கோரது செயலன்றி வேறென்ன? கல்வாணரது பெருந்துணையால் நாடுநகரங்களை வென்று பொருளின் பெருவளங்களைக் கொள்ளும் பேரரசர், தமக்கு வாழ்வளித்த புலமை மிக்கோரை நன்மதிப்புடன் பேண மறந்து சின்னீரவாகிய புலனுகர்ச்சியில் மூழ்குங்காலை மதுகையிழந்து, நாட்டின் நலனிழந்து நாகரிக நிலையில் தாழ்வடைகின்றனர். 'புத்திமான் பலவான்' என்பது முதுமொழி யன்றோ? உலகெல்லாம் இருள் நிறைந்து, அதில் வாழுர் மனிதரனைவரும் விலங்குகளே போல் திரிந்த பண்டைக்காலத்தே தமிழ் மக்கள் நாகரிகத்தின் உன்னத நிலையை அடைந்தவராய், தமிழ் நாட்டு மூவேந்தரும் இமயத்தில் தமது இலச்சினையை நாட்டிய கொற்றம் மிக்கவராய், தென்குமரியொடு வடவிமயம் ஒரு மொழி வைத்துலகாண்ட வியத்தகும் வீரராய், தெய்வப்புலவர்களுடன் தோழமைகொண்டு அன்னார் நன்மதிப்பைப் பெறுவதே தமது வாழ்க்கையின் விழுப்

பயன் என்னும் கொள்கையினராய் இருந்து அரசு புரிந்தது உலக றிந்த உண்மை. தமிழர்கள் வாணிபத்தில் தலைசிறந்து விளங்கி னர். பட்டினும், மயிரினும், பருத்தி நூலினும் இயற்றிய பாலாவி யன்ன மெல்லிய ஆடைகள், பொன், முத்து, பவளம், அகில், சந்தனம், தோகை, தந்தம் ஆகியவற்றைக் கப்பல் வழியாலும், நிலத்தின் பெருவழியாலும் அராபியா, எகுபதிநாடு, பாரசிகம், மெசபடோமியா, பலஸ்தீன், கிரேக்கநாடு, உரோமாபுரி ஆகிய தூரதேசங்களுக்கெல்லாம் கொண்டுபோய் வர்த்தகம் புரிந் திருக்கின்றனர். சிற்பம், ஓவியம் ஆகிய அருங்கலைகள் அறு பத்து நான்கினும் தமிழர் சிறந்த புலமை மிக்கோர் எனத் தஞ்சை இராசராசேச்சுரம், சித்தன்னவாசல் சித்திரம், காவிரியணை என்பன போன்ற செயற்கரிய சிற்பங்கள் சான்று பகரும். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூலையும், திருக்குறள் போன்ற அறநூலையும் சிலப்பதிகாரம் போன்ற இயல் இசை நாடக நூலையும், அகப்பொருள் புறப்பொருள்களின் இலக் கிய நூல்களையும் இயற்றிய எண்ணிறந்த புலவர்களையும் கொண்ட நாடு நில உலகில் தமிழ் நாடொழிந்த எங்கேனும் உண்டா? அற்றைநாளில் சேர சோழ பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தர்கள், குறுநிலமன்னர்கள், நிலக்கிழவர்கள், அமைச்சர் கள், வாணிபர்கள், மருத்துவர்கள், பெண்மக்கள் ஆகிய அனை வரும் மாண்புமிக்க புலவர்களாய் இருந்தனர். தமிழ்நாடு கலை மலிந்த நாடாக விளங்கிற்று. அரசரும் குடிகளும் கல்வியே கருந்தனமெனவும், அதனைத் தேடுவதே தமது வாழ்க்கைப்பயன் எனவும் நினைத்து தமிழ்க்கலைகளைப் போற்றி வந்தனர். அதுகாறும் அவர்கள் வெற்றிக்கு வீழ்ச்சியேயில்லை. கலைத்திறன் சுருங்கச் சுருங்க கல்லாமாக்களுக்கு அடிமைப்பட்டு, தமிழர் தந்நாகரிகத் தின் தனிச் சிறப்புகளை மறந்து, பிறமொழியாளரின் இழிந்த வான கொள்கைகளை மேற்கொண்டு, அடிமை வாழ்வில் அகப் பட்டு மீளுந்வகை தெரியாது திகைத்து நிற்கின்றனர். நமது பிறவிப் பிணிகளாய் நம்மைப் பிணித்திருக்கும் சில ஆரியக் கொள்கைகளினின்றும் நாம் விடுதலை பெற்றாலன்றி நமது நாடு விடுதலையடையாது, என்பது ஒருதலை. பண்டைத்தமிழரின் நாக ரிகச்சிறப்பினை நாம் உணர்ந்து கோடற்கு இன்றியமையாத சாத னங்களாயிருப்பன தமிழ் நூல்களே யாதலால் அவற்றையும்

இற்றைநாளில் மேம்பாடடைந்துவரும் பிறநாட்டினரின் கலைத் திறன் முதலியவற்றையும் ஒருங்கே நன்கு கற்றுத் தெளிவடைந் தால் எல்லாவகையிலும் நாம் முன்னேற்றம் அடைதல் கூடும்.

## தமிழ்க்கல்வியின் கையறுநிலை

ஆகலால் நமது நாட்டின் முன்னேற்றத்திற் கெனத் தொண்டுபுரியும் முதறிஞர்கள், கல்வி வளர்ச்சியே பல்வகை முன்னேற்றத்திற்கும் அடிப்படை என்பதை நன்குணர்ந்தனர். ஒரு நூற்றாண்டிற்கு மேற்பட்ட காலமாக பல்கலைக்கழகங்களை நிறுவியும், கோடிக் கணக்காகத் தொகைகளைச் செலவிட்டும், அக் கழகங்களுக்குரிய கலாசாலைகளில் பயின்று தேறும் மாணவர்க் குப் பட்டங்களையும் பதவிகளையும் வழங்கியும், ஆங்கிலநூல், கணிதநூல், சரிதநூல், தத்துவநூல், இரசாயனநூல், பூதநூல், இயற் கைநூல், அறநூல், சிற்பநூல், மருத்துவநூல் இன்னோரன்ன கலைகளின் நுண்மாண் பொருள்களைக் கற்று வல்ல இளைஞர்களை ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கில் தயாரித்து விடுகின்றனர். இப்பட்டதாரிகள், தாம் அரிதிற்கற்ற கலைத்திறனை வயிறு வளர்ப் பதற்கான பதவிகளைத் தேடுதற்குரிய கருவிகளாக மதித்தார் களே யன்றி, அக்கலையறிவுகளைப் பிற்றைநாளில் வளர்க்கவோ, ஆங்கிலமறியாத கோடிக்கணக்கான மக்களுக்குப் பயன்படும் வழியில் போதிக்கவோ, நாட்டின் வளம் பெருகுவதற்கான தொழில் முறைகளில் மேனாட்டுக் கலைவாணரைப்போல் பயன் படுத்தவோ முயன்றார்களில்லை. தாம் பெரிய கலைவாணர்களெனவும், சிறந்த பட்டதாரிகளெனவும், இறுமாந்து தமது நாட்டினர், உற்றார், உறவினர் ஆகிய மக்களது நடை உடை ஒழுகலாறு களை அவமதித்து அவர்களுடன் தோழமை கொள்ளாதும், அன் னார் கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் சிறப்புறுமாறு சமூகத் தொண் டுகளைப் புரியாதும், தனித்த சாதியினராகப் பிரிந்து "நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள்ளாது" இருந்து வருகின்றனர். அன்றி யும் அரசியலார் வழங்கிவரும் உயர்பதவிகளைப் பெறவேணு மென்ற வேட்கையால் விழுங்கப்பட்டு, நாட்டு மொழிகளையும், நமது முதறிஞர்கள் எய்ப்பில் வைப்பென வைத்துப்போந்த தெய் வப்பனுவல்களையும் நன்குணராது வீணே வளர்ந்துவரும் பட்ட தாரிகள் பல்கலைக்கழகங்களின் உறுப்பினராயும், கல்லூரித்தலை

வர்களாகவும், கல்வித் தலைவர்களாகவும் பதவிகளைப் பெற்று, நாட்டுமொழிகள் தலையெடுக்க வொண்ணாது சூழ்ந்து வரும் கேடுகட்கு அளவுதானும் உண்டோ? தாய்மொழி வளர்ச்சியில் கருத்துடைய ஒருசிலர் அதன் பொருட்டாகக் கொணருந் திட்டங்களை ஏற்காது, 'தான்றேருன், தேற்றியுந் தேருன்' என்ற கூற்றிற்கு இலக்கியமான இவ் வன்கண்ணர்கள் மறுப்புகள் கூறிக் கவிழ்த்து விடுகின்றனர். இத்தகைய தீயபண்புகள் நிரம்பியோர் மிகுந்திருக்கும் பல்கலைக் கழங்களிலாதல், கல்லூரிகளிலாதல் தாய் மொழிக் கல்வி போற்றி வளர்க்கப்படுமென எண்ணுதல் ஏழைமதியன்றோ?

குருடரெனவும், கல்லாமாக்களெனவும், நாகரிக உலகத்தினரால் இகழப்பட்டு, நேற்றுவரை படுகுழியில் ஆழ்ந்துகிடந்த சப்பானியர் ஐம்பதாண்டுகளிற்குள்ளாக மேனாட்டினரும் திகைப்புறும் வண்ணம் மதிவலமும், படைவலமும், பொருள்வலமும், பெற்றுத் திகழ்வது, அவர் தம் நாட்டுமொழி அளித்த மதுகையன்றோ? தமது சுமைகளை எடுக்கவும், தாம் சவாரி செய்யவும் வேண்டி, குடித்தனக்காரர் தீனி வைத்தும் சேணமாதியவற்ருல் ஒப்பனை செய்தும் வளர்த்துவரும் குதிரை முதலிய கால்நடைகளைப் போன்று, தமது ஏவல்வழி நின்று பணியாற்றுதற் பொருட்டுத் துரைத்தனத்தார் வழங்கும் பட்டம் பதவி முதலியவற்ருல் அழகு செய்யப்பெற்ற பட்டதாரிகள், தமது உண்மை நிலையைச் செவ்விதின் உணராமலும், நாட்டின் நலத்தைச் சிறிதும் கருதாமலும் கல்வி வளர்ச்சிக்குச் சிறந்த கருவி தாய்மொழி அன்றெனஅறியாதுகூறிக் கேடு விளைக்கின்றனர். உலகவழக் கழிந் தொழிந்து சிதைந்தமையால் பிணமொழி (Classical language) எனக் கருதப்படும் மொழிகட்குத் தனிச்சிறப்பும் ஆதரவும் இடங்கள்தோறும் தேடுகின்றனர். இலக்கணம், இலக்கியம், சித்தாந்தம், வேதாந்தம், மருத்துவம் ஆதிய பிரிவுகளில் தலைசிறந்த தமிழ் நூற்கள் பல விருந்தும், சென்னை, அண்ணாமலைப் பல்கலைக்கழகங்களின் தலைவர்கள் தமிழ்க் கலைகளின் சிறப்பை நன்குணராமலோ, பிறமொழியின்மாட்டுத் தாம் தவறி வைத்திருக்கும் சார்பினுலோ, தமிழ் மாணவர்க்கு வித்துவான் என்ற ஒரு பட்டமே வழங்கவும், வடமொழியாளர்க்கு மட்டும் பல் வகையினவாகிய சிரோமணி, வித்துவான் பட்டங்களையும் வழங்கி வருகின்றனர். உயர்தனிச் செம்மொழி

களென அறிவுடையோர் போற்றும் சீரிய மொழிகளின் பெற்றிமைகளில் ஒன்றும் பொருந்தாத 'இந்தி' என்னும் மொழி அரசியல் மேம்பாட்டிற்கு இன்றியமையாத சாதன மெனச் சாதிக்கின்றனர். பள்ளியிறுதி (S. S. L. C.) ஆகிய தேர்வுகளில் அம்மொழியைக் கட்டாய பாடம் ஆக்கவும் வேண்டுமென்கின்றனர். அம்மொழியின் வாழ்வு நேற்றையதெனவும், அது பயிலிடம் மிகச் சுருங்கியதெனவும், அரசியற் கிளர்ச்சியின் மேம்பாப்பில் நீர்க்குமிழி போல் தோன்றி மறையுங் கொள்கைகளைப் போன்ற பெற்றிமையதென்றும் நம்மவர் சிறிதும் சிந்தித்தாரில்லை. இவ்வாறாக ஆங்கிலம், வடமொழி, இந்தி ஆகிய பிற மொழிகளின் ஆக்கத்தைத் தேடுதலில் கருத்துடையராய், தாய்மொழி வளர்ச்சியில் கவலை கொள்ளாது அதனைப் புறக்கணித்து வரும் பட்டதாரிகள் நிறைந்துள்ள பல்கலைக் கழகங்களையும், கல்விநிலையங்களையும் நம்பி யிருத்தலில் பயனேதுமுண்டோ? பல்கலைக்கழகத்தினர் B. A. வகுப்பில் V வது தமிழ்த்தொகுதியையும் B. A. தமிழ் Honours பட்டத் தேர்வையும் அனுமதித்திருந்தும், தமிழ் நாட்டிலுள்ள முதற்றரக் கல்லூரிகளில் எத்தனை கல்லூரிகள் இத்தேர்வுகட்கு வசதி தருகின்றன? சட்டசபையிலுள்ள தமிழ்நாட்டு உறுப்பினரும், நமது மந்திரிமார்களும், ஆட்சித்தலைவர்களும் இக்கருமத்தில் தமது கருத்தைச் செலுத்துவாராகில் தமிழ் நாட்டிலுள்ள அரசியலார் கல்லூரிகள் (Government Colleges) யாவற்றினும் இத்தேர்வுகட்குரிய வசதிகள் மிக எளிதில் வாய்த்திருக்குமன்றோ? சென்னை நகரிலுள்ள பச்சையப்பன் ஆகிய முதற்றரக்கல்லூரிகள் யாவும் தமிழ்மொழிக்கு உயர்பதம் அளிக்காது அறவே புறக்கணித்திருப்பது தமிழ்நாட்டுத் தலைவர்களின் கவனத்திற்குரியதன்றோ? சென்னைப் பல்கலைக் கழகத்தார், கீழைத்தேயமொழிகளின் பட்டத்தேர்வுகள் (Oriental Titles Examinations) செய்துபட்டமளிக்க வசதிகள் அமைத்திருக்க வடமொழி பயில்வோர்க்குப் பதினெட்டு கலாசாலைகளும் தமிழ்மொழி பயில்வோர்க்குத் திருவையாற்று அரசர் கல்லூரி ஒன்றினும் ஓர் ஓதுக்கிடம் வாய்த்திருப்பதன் காரணம் யாது? அன்றுமல்லைப் பல்கலைக் கழகத்தினர் இசைநூற்புலமையை வளர்த்தற்கு அண்மையில் விதிக ளமைத்தனர். பொருளுணர்ச்சி யில்லாத 'கிராமோபோன்' போன்ற பணிதாகிய

இசைக்கருவிகளை இயற்றுவது அறிவுடைமை யாமோ? இதனை நன்குணர்ந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இசைக் கலையாசிரியர்கள் ஆங்கிலம், வடமொழி, தெலுங்கு எனும் மூன்று மொழிகளிலும் சிறிதளவு பயிற்சியை மாணவர் பெற வேண்டுமெனக் கருதிப் பாடதிட்டங்களை யமைத்துத் தமிழை அறவே ஒதுக்கிவிட்டனர். இஃது அறிவுடையோர் எள்ளி நகை யாடற் குரியதொரு செயலல்லவா? பண்சுமந்த பாடல்கள் எனவும், தெய்வத்தமிழ்ப் பனுவல்கள் எனவும், தமிழ்நாடு போற்றும் தேவாரத் திருவாசகங்களையும் திவ்வியப்பிரபந்தங்களையும், திருப் புகழ் திருவருட்பா ஆகிய இசை நூல்களையும் அவமதித்து ஒதுக் கிய வன்கண்ணர்களை இசை ஆசிரியர்களாய் அமர்த்திய அப் பல்கலைக்கழகம் தமிழ்நாட்டின் நன்மதிப்பை எங்ஙனம் பெறு தல் கூடும்? தேவாரத் திருப்பாடல்களாலும், திவ்வியப்பிர பந்தங்களாலும் பல்லாயிர ஆண்டுகளாக உயிர்பெற்று விளங்கும் திருக்கோயில்களைப் புதுக்குந் திருவினர்கள் அத் திருக்கோயில் களுக்கு உயிரும் வாழ்வும் ஒருங்கே அளித்த தெய்வப்பனுவல்கள் அங்கு வீறுடன் வழங்குதற்கு வசதிகள் செய்ய நினையாது தன் னலமே கருதும் தீத்திறத்தாரது பொய்யுரைகளில் மயங்கி, கனஞ்சடையென் றுருவேற்றிக் கண் மூடிக் கதறும் வேதக்கிடை களை நிறுவுதற்கு முற்படும் ஏழைமைக்கு என்னென் றிரங்குவேம்!

## தமிழர் நாகரிகம்

மேனாட்டினர், நாகரிகத்தின் உயர்நிலையை அடைந்தவர் எனும் மயக்க உணர்ச்சியால் அன்னாரின் ஒழுகலாறுகளையும் மனப்பான்மைகளையும் நம்மவரிற் பலர் கைக்கொள்ளுகின்றனர். "நாளையே கூற்றுவன் வருவான்; இன்றே உண்டு களியுங்கள்' என்ற கொள்கையால் ஆடவர் பெண்டிர் எனப்படுவோர், தமது பழங்குடி மரபுகளை ஓம்பாது களியாட்டயர்தலே நோக்கமாகத் தமது மனிதத் தன்மைகளை நாடோறும் இழந்து வருவதைக் கண்டு மேனாட்டு மூதறிஞர்கள் மிகவும் கவல்கின்றனர். வெளி மயக்குகளால் ஏமாற்றமடைந்து மேனாட்டினரின் சீர்கெட்ட கொள்கைகளும் ஒழுகலாறுகளுமே நாகரிகமெனக் கொண்டு அவற்றையெல்லாம் பன்னாடைகளைப் போல் கைக்கொள்ள முய லும் நம்மவரின் ஏழைமைக்கு மிகவும் இரங்குகின்றேம். குடித்

தனங்கள் மனமாட்சி யற்று மாய்ந்துபோக விட்டு, துரைத்தனத் தைச் செப்பனிடுவது அறிவுடைமையோ? உலகியல் நெறியில் உயர்நிலை எய்தியுள்ள மேனாட்டினரின் வாழ்க்கை நாகரிக மல்ல வெனின், நாரிகமென்பதுதான் என்ன? நாகரிகம் என்ற சொல்லே வடமொழி நூல்களில் பயிலப்படவில்லை யெனவும், இதன் அடிச் சொல் (Rootword) யாதெனவும், இம்மொழி ஆக்கத்தின் விதி யாதெனவும் உசாவி, நாகரிகம் என்பது வடமொழியாளர் அறி யாததொன்றெனவும் தெரிந்துகொண்டேன்.

பிறப்பால் உயர்வுதேடும் பெற்றியினர் தமது வெளிப்பூச்சும் தாழ்வடமுமே சிறந்த ஆசாரமெனக் கருதி ஏனோரைத் தாழ்வு செய்கின்றனர். தமிழர் மதிக்கும் ஆசாரம் இதுவல்ல: "நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோடு இன்னாத எவ்வுயிர்க் கும் செய்யாமைகல்வியோடொப்புரவாற்ற அறிதல் அறிவுடைமை நல்லினத்தாரோடு நட்டல் இவையெட்டும் சொல்லிய ஆசா வித்து," என்பதே பழந்தமிழ் மக்கள் பாராட்டி வளர்த்த ஆசாரம். தமிழ்ப்பெருங்குடி மக்களாயினோர் இந்திரர் அமிழ்தம் இயைவதாயி னும் இனிதெனத் தமியர் உண்டலு மிலர்; பிறரஞ்சுவதஞ்சிப் புக ழெனி னுயிருங் கொடுக்குவர்; பழியெனி னுலகுடன்பெறினுங் கொள்ளார்;தமக்கெனமுயலா நோன்றாட் பிறர்க்கென முயலுநர்! இச்சிரிய கொள்கைகளைப் பின்பற்றிய ஒழுக்கமே தமிழர் நாகரிகம். கல்விச்செல்வம், பொருட்செல்வம் ஆகிய இரண்டு செல்வங்களை யும் ஒருங்கே பெற்றாலும், அரசியல் உரிமைகள் அனைத்தையும் அடைந்தாலும் இக்கூறிய நாகரிகப் பண்புகள் மனிதர்மாட்டு அமையாவிடில் தாம்பெற்ற செல்வமாகியவற்றால் தமக்கும் பிறர்க் கும் கேடுகள் விளையும் என்பது ஒருதலை.

## தற்கால நிலை

இற்றை நாளில் கல்வி கற்போரின் நோக்கம் மிகத் தாழ்ந்து விட்டது. யாதேனுமொரு ஊழியஞ்செய்து ஊதியம் பெறுதற் பொருட்டே கல்வி கற்கப்படுகின்றது. அத்தகைய நோக்கமில்லாத வர் கல்வியை நாடுவதே யில்லை. நமக் குற்றதுணை கல்வியி "னுங் கில்லை" என்ற சீரிய கொள்கையை அறவே மறந்துவிட்டனர். ஆதலால் பண்டைக்காலம்போல் அல்லாது, கல்விக்குரிய சாதனங்

களான புத்தகங்கள் மலிந்திருந்தும், போதனாமுறை பயின்றுள்ள ஆசிரியர் மிக்கிருந்தும், கலாசாலைகள் ஊர்தோறும் நிறுவப்பெற்றிருந்தும், நாடெங்கும் கலை மலியவில்லை. கலைத்திறம் குன்றிவிட்டது; கல்விப்பொருளை இழந்து, அறியாமையில் மூழ்கி, நலந்தீங்குதானும் தெரியாது அவலமுறும் நாடாகிவிட்டது. இப்பொழுதுள்ள செல்வரிற் பெரும்பாலார் கல்வியைப் போற்றுவதில்லை. நூற்பயனை நன்குணர்ந்து தெவிட்டாத இஃபத்திற் றிளைக்கும் திறனற்று, செவியிற் சுவையுணர்வற்று, சிற்றின்ப நுகர்ச்சியினை நாடும் வாயுணர்வின் மாக்களாய்விட்டனர். உலகியல் நிலையில் உயர்பதங்களை நாடிக் கைப்பொருளை வரையாது வழங்கிப் பெறும் பதவிகளின் கடமைகளைத் தாமும் உணர்ந்துகொள்ளாமலும் நேரியவழியில் முறைசெய்யாமலும் உலகின் நகைப்பொருளாய் வதிகின்றனர்.

நகரக் கழகங்களிலும் (Municipalities) ஊர்க் கழகங்களிலும் (Village Panchayats) கூற்றக் கழகங்களிலும் (Taluk Boards) நாட்டுக் கழகங்களிலும் (District Boards) நாட்டின் கல்விக் கழகங்களிலும் (District Educational Councils) உறுப்பினராயும், தலைவராயும் அமர்பவர்கள் தமிழ்மொழிப்பற்றுடன் கல்வியை வளர்க்கும் கருத்துடையாரானால் தொடக்கக் கல்வியும் உயர்தரக் கல்வியும் எத்துணைத் திருத்தமுறும்? தமிழ் நாட்டினின்று சட்டசபைக்கு அனுப்பப்பெறும் உறுப்பினரும், நகரக் கழகங்களிலிருந்தும் நாட்டுக் கழகங்களிலிருந்தும் பல்கலைக் கழகங்களுக்கு அனுப்பப்பெறும் உறுப்பினரும் தமிழ் மொழியைப் போற்றுங் கருத்துடையராயின் தமிழ்மொழி எத்துணை ஆக்கம் பெறும்? இக் கூறிய கழகங்கட்கு மொழிப்பற்று சிறிதுமில்லாதவர்களும், பிறமொழிகளை வளர்க்கும் நோக்குடையார்களும் மிகுதியாக அனுப்பப்படுவதால் தமிழ்மொழி பாதுகாப்பும் போற்றுதலுமின்றித் தளர்வுறுகின்றது. கலைநூற்களிலும் ஆங்கிலத்திலும் புலமையுற்றோர்க்குத் தரப்படும் நன்மதிப்பும் உரிமைகளும் நாட்டுமொழி வல்லோர்க்கு வழங்கப் பெறுவதில்லை.

## தமிழர் பணி

தமிழ்மொழி ஆக்கம் பெறுதற்பொருட்டு கல்வி நிலையங்களிலும், பல்கலைக்கழகங்களிலும் தலைவராயும், பணியாளர்களா

யும் அமர்பவர் மிகுந்த தமிழ்ப் பற்றுடையாயிருத்தல் இன்றியமையாததெனவும், இக் கல்விநிலையங்கள் இயற்றத்தகும் தமிழ்ப் பணிகள் யாவையெனவும், தமிழ்நாட்டுத் தலைவர்கள் தமிழ்த் தொண்டு செவ்வனம் நடைபெறுதற்கான கருமங்களில் கருத்தூன்ற வேண்டுமெனவும் மேலே கூறியுள்ளேம். இக் கல்வி நிலையங்களையே நம்பியிருத்தல் சாலாது எனவும் கூறினேம். இனி அரசியலார் நடத்திவரும் கலாசாலைகளாலும், ஊர்க்கழகங்கள் (Local Boards) நடத்திவரும் கலாசாலைகளாலும், பல்கலைக் கழகங்களாலும் இயற்றத்தகும் தமிழ்த்தொண்டு மிகச் சுருங்கிய பயனை விளைக்குமேயன்றி, நாடெங்குமே தமிழ்க்கலை பாவுதற்கு உரிய வசதிகளை அளிக்க முடியாது என்பது ஒருதலை. தமிழ்ப் புரவலராயும், தமிழன்பராயும் உள்ள அனைவரும் ஒருங்கு சேர்ந்து இம்மொழித் தொண்டினை ஊக்கத்துடன் புரிய முற்படவேண்டும். தமிழன்பர்கள் தாந்தாமும் தனித்தனியே செய்யவல்ல சில தொண்டுகள் உண்டு. அறிவுடையோர் போற்றும் தமிழ் நூற்களை ஒவ்வொருவரும் விலை கொடுத்து வாங்கித் தக்கார் துணை கொண்டு தினமும் பயிலுதல்வேண்டும். தத்தம் ஊர்களில் நூல் நிலையங்களை நிறுவியும், கலைபயிலிடங்களை நாட்டியும் கல்வி கற்காத எல்லா மனிதர்களையும் வேற்றுமையின்றி ஆதரவுடன் ஒருங்குசேர்த்து, அவர்கட்கு நல்லுணர்ச்சியும், ஒருமைப்பாடும், மனத்திண்மையும், சீலமும், பொதுநல நோக்கங்களும் வளரக் கூடியமுறையில் ஆய்வுரைகளைப் புகட்டுதல்வேண்டும். தமிழ்ப் புலவர்கட்கு நன்மதிப்பும், தமிழ்மாணவர்க்கு நல்லாதரவும் தருதல் வேண்டும். ஞானசாகரம், தமிழ்ப்பொழில், செந்தமிழ்ச்செல்வி, கலாநிலயம், சித்தாந்தம் ஆதிய சிறந்த தமிழ்த்தாள்களை மிகுதியும் போற்றி வளர்க்கவேண்டும்.

---

# மூர்த்தி நாயனர்

(பண்டிட் A. நடராஜபிள்ளை அவர்கள்)

[முன் ௨அ௬-ம் பக்கத் தொடர்ச்சி]

## இரண்டாங்கூறு

## எல்லாஞ் சிவமயம்

இங்ஙனம் பல்வள மிக்க மதுரைமாநகரில், வணிகர் மரபில், மூர்த்தி நாயனர் என்ற பெரியார் ஒருவர் தோன்றினர். அவர் தோன்றிய வணிகக்குடி பாண்டிநாட்டிலுள்ள பழங்குடிகள் பல வற்றுள் மிகச் சிறப்புற்ற ஒன்ரும். அவர் குழந்தையிலேயே அருள் நிரம்பிய கண்களையும், அன்பு ததும்பிய முகப்பொலிவினை யும் அடைந்திருந்தார். அவர்க்குச் சிறுவயதிலேயே எல்லா வுயிர் களிடத்தும் அருள் மிகுந்திருந்தது. ஆகையால், அவர் இறைவன் படைப்புக்களாகிய எல்லாப் பொருள்களையும் அன்பு மயமாய்க் கண்டு அகமகிழ்ந்தார். கொடிய காட்டு விலங்குகளையும் அவர் கும்பிட்டு வரவேற்பார். கொசுகு, எறும்பு முதலிய சிற்றுயிர் கள்மாட்டும் அவர் வைத்த அருள் பெரிதுங் கொண்டாடத் தக்கதாம். இளமையில், அவருடன் கூடி யாடும் இளைஞர்கள் வண்டு தும்பி முதலியவற்றைப் பிடித்து வருத்துவதைக் கண்டால், அவர் கண்ணீர்விட்டுக் கலங்கிவிடுவார்; மேலும் அவர் அவர்களை அச்செயலினின்றும் அருள் மொழிகள் பல கூறி விலக் குவார். பசுக்களினின்றும் அவற்றின் கன்றுகளுக்குரிய பால் முழுவதையும் மக்கள் கறந்து சாப்பிடுதலைக் கண்டு, அவர் கொண்ட துன்பங் கணக்கிலதாம். ஆறறிவு படைத்த மக்களின் வயிறுகள், ஐயறிவுகொண்ட ஆடு மாடு கோழிகளின் இடுகாடுக ளாக மாறியமைக்கு அவர் துன்புரு நாட்களே கிடையா. செம் பொருளாகிய சொக்கலிங்கப் பெருமானிடத்தில் அவர்க்கேற்பட்ட பேரன்போ அளவிடற் கரியதாம். அவர்க்கு, இம்மைப்பயனும், மறுமைப்பயனும் சொக்கலிங்கப்பெருமானே யாவர் என்ற திருக் கருத்தும் தோன்றலாயிற்று. அஃதெவ்விதமென்ருல்:—

இவ்வுலகின் மக்கள் அன்பு (சிவ)மயமாகிய செம்பொருளை, பல பிறவிகளிற் புகுந்து பெறும் அன்பென்னும் பண்பினலே

அடைய முயல்வதொன்றே வீட்டுநெறி என்பது அறிஞர்கள் துணிபு. இதற்காகவே, பெரியோர்கள் மக்கள் வாழ்க்கையை இல்லறம், துறவறம் என இரண்டாக வகுத்தமைத்தனர். பிறந்த இளமைக்காலத்தில் பெரும்பான்மையான மக்கள் எப்பொருளும் தமக்குமட்டும் வேண்டுமென நினைக்கும் அன்பில்லா நெஞ்சின ரா யுள்ளனர். பின்னர், அவர்கள் இல்லறவாழ்வினர்களாகிய தம் பெற்றோர் முதலியவர்களுடன் பழகுதலால், தாயினிடத்தில் அன்பும், தந்தையினிடத்தில் அன்பும், உடன்பிறந்தாரிடத்தில் அன்பும், பாட்டன் பாட்டிமாரிடத்தில் அன்பும் கொண்டு விளங்கு கின்றனர். பிறகு, அவர்களே இல்லறத்திற் புகுந்து மனைவி பால் அன்பும், மாமன் மாமி மைத்துனன் மைத்துனி முதலிய சுற்றத்தார்களிடத்தில் அன்பும், தம்மரபினர்பால் அன்பும், நண் பர்கள்பால் அன்பும், பக்கத்தவர்களிடத்தில் அன்பும், ஊரவர் களிடத்தில் அன்பும், நாட்டவர்களிடத்தில் அன்பும் கொள் ளத் தொடங்குகின்றனர். அதற்குமேல் அவர்கள் துறவறத்தில் நுழைந்து, எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உலகவுயிர் களின் நன்மை கருதி உழைக்கின்றனர். பின்பு, அவர்கள் அன்பு (சிவ) மயமாய் மாறி எல்லாப் பொருள்களையும் சிவமயமாய்க் காண்கின்றனர். அவ்வண்ணம் அவர்களுடைய காட்சி மாறவே, அவர்களிடத்திற் பேரன்பு (பக்தி) தோன்றுகிறது. அப் பே ரன்பே அம்மக்களைப் பேரின்பமாகிய வீட்டு நெறியிற் புகச் செய்கின்றது. எனவே, பல பிறவிகளிற் புகுந்து இல்லற துற வறங்களை நடத்தி அன்பினைத் தெளிவாய் நெஞ்சிற்கொண்ட மூர்த்திநாயனர் இளமையிலேயே இவ்வுலக வாழ்க்கையாகிய இல்லறத்தை விட்டு, எல்லாப் பொருள்களையும் சிவமயமாய்க் கருதி, இல்லற துறவறங்களின் பயனாகிய பேரன்பினைக் கைக் கொண்டார் என்பதாம். இதனையே நந்நாட்டவர், "விட்ட குறை, தொட்ட குறை," என்பர்.

மூர்த்திநாயனர் இம்முறையாகத் திருவாலவாயில் எழுந் தருளி இருக்கும் இறைவனின் திருவடிகளே தமக்குப் பேரின்பங் கொடுக்க வல்ல குறியாகக் கொண்டு வழிபடலாயினர். அவர் சொக்கலிங்கப் பெருமானைத் தந்தையாகவும், கயற்கண்ணம்மை யைத் தாயாகவும், உலகமக்களை உடன்பிறந்தார்களாகவும் அறிவினை மனைவியாகவும், விலங்கு முதலிய தாழ்ந்த உயிர்களை

மக்களாகவும், பேரின்பத்தைத் தாமடைய வேண்டிய பேருகவும் கொண்டு நடக்கலானர். ஆகவே, மூர்த்திநாயனர் நாடோறும் தவருமல் வைகறை வேளையிலே எழுந்து, காலைக் கடமைகளைச் செய்து முடிப்பர். பின்பு, அவர் திருக்கோயில் நோக்கிச் சென்று அந்திப்பிறை அணிந்த ஐயனைப் போற்றி வணங்குவர். பிறகு, நாயனர் பக்கத்திலுள்ள சந்தனக் காட்டிற்குப் போய், விளைந்த சந்தனக் கட்டை ஒன்றினை வெட்டிக்கொண்டு வருவர். அக் கட்டை அவரால் அன்று பகல் முழுதும் உறைக்கப்பட்டுச் சந்தனமாகும். அச்சந்தனம், அன்றிரவு எம்பெருமானுக்குத் திருக்காப்பாக அணியப் பெறும். அவரும் அன்று மாலை பொற்ருமரைக் குளத்தில் மூழ்கி எழுந்து, எம்பெருமான் திருமுன்னிலையில் நின்று போற்றி வணங்கிப் பொழுதினைக் கழிப்பர். அவர்க்கு உண்டி உடை முதலிய யாவும் சொக்கலிங்கப் பெருமான் திருக்கோயிலிலேயே கிடைக்கப் பெற்றன. ஆகலின் அவர் வேறு எவ்விதக் கவலையுமின்றிச் சொக்கலிங்கப் பெருமான் திருப்பணியை முட்டாது செய்துவந்தார். இடைவிடா உழைப்பாலும், நெஞ்சகத்தே நிறைந்த அன்பாலும் மூர்த்திநாயனர் திருமேனி கண்டார் விரும்புங் கட்டழகுடன் விளங்கியது. அவருடைய உருண்டு திரண்ட தோள்களும், பருத்துப் படர்ந்த மார்பும், ஆண் சிங்கத்தின் இடுப்பினைப் போன்ற இடையும், கட்டுக்காளையின் செலவினையொத்த நடையும், அடியாருடைய உடையும் பார்ப்போர் விழிகளையும் நெஞ்சையும் பற்றிக் கொள்ளை கொண்டன.

மூர்த்திநாயனரின் அகமும் புறமும் செம்பொருளின் திருக்காட்சியே நிறைந்தபடியால், உலகப் பொருள்க ளெல்லாம் அவர்க்குச் சிவமயமாய்த் தெரிந்தன. அதனல், அவர் எல்லாரிடத்திலும் இனிய மொழிகளையே பேசலாயினர். இளையோர்களையும் அவர் இருகை குவித்து வணங்குவர். அவரால் விலங்குகளும் பெருமானுடைய் பேருளாகக் கருதப்பட்டன. மரஞ் செடி கொடிகளும் அவருடைய கண்களுக்கு வல்லானின் பெருமையாகத் தோன்றின. அவர், வானினைத் தொட்டுயர்ந்த மலைகளையும், அடிவானத்தோடு பொருந்திக் காணும் கருங்கடலையுங் கண்டு மெய்ம்மறந்து நிற்குங் காட்சி கன்னெஞ்சினையும் கரையச் செய்யும். அன்பு மூர்த்தியாரின் பேரன்பினையும், நல் லொழுக்கத்தையும் கண்டுகொண்ட பாண்டிநாட்டு மக்கள் பலரும் அவரைத் தமது

குலதெய்வம்போற் கொண்டாடினர். மூர்த்திநாயனர் தமது சந்தனக் காப்புத் திருப்பணியை யாதொரு முட்டுப்பாடுமின்றி நடத்தியதோடு, எல்லாவற்றையும் சிவமயமாய் எண்ணி, எவ்வுயிர்க்கும் திருவருள் உண்டாம் வண்ணம் வல்லானைப் போற்றி வணங்கி வந்தனர்.

அக்காலத்தில் பாண்டி நாட்டினை மதுரை மாநகரிலிருந்து ஆட்சி புரிந்த பாண்டியன் குடிமக்களுக்கு எவ்விதக் கொடுமையுஞ் செய்யாக் கோலனாயினும், மடிமை என்னும் பண்பிற்கு அடிமையாய் இருந்தான். அதனால், அவன் தன்னுடைய வாணாட்களை உண்பதிலும் உறங்குவதிலுஞ் செலவிட்டு, வீணாட்களாக்கினான். அதிகாரிகளும் அவனைப் பின்பற்றி உண்டுறங்கலாயினர். படைமக்களும் பாண்டியனைத் தொடர்ந்து படுத்துறங்கினர். குடிமக்களோ, அரசனை மலைபோல் நம்பியவர்களாய், யாதொரு விதமான கலக்கமுமின்றி உண்டு உடுத்து உறங்கித் திருவிழா முதலியன கொண்டாடிக் கொண்டிருந்தனர். "அரசன் எவ்வழி? அவ்வழி குடிகள்" என்ற பழமொழிப்படி அரசனைப் பற்றிய சோம்பற்குணம் பாண்டி நாடெங்கும் பரவியது. இங்ஙனம் நாடெங்கும் சோம்பற்குணம் பரவியும், நமது மூர்த்திநாயனரிடத்தில் மட்டும் அக்குணத்திற்கு நெருங்க இடங் கிடைக்கவில்லை. அவர் வழக்கம்போல் தமது திருப்பணியை முறையே நடத்திக் கொண்டிருந்தனர்.

(தொடரும்)

---

# போர்க்கருவிகள் போந்த புதுமை

## Mines

## நிலக்கனியும் நீர்க்கனியும்.

[காழி. சிவ. கண்ணுசாமி. B. A.]

(முன் ௨அ௬௩-ம் பக்கத் தொடர்ச்சி)

பழத்தைக் குறிக்குங் கனி யென்பது உலோகங்கள் எடுப்பதற்காக வெட்டப்படுஞ் சுரங்கத்தையுங் குறிக்கும். போர்த்துறை வழக்கிலும் அச்சொல் பண்டெல்லாம் நிலத்தின் கீழ்த் தோண்டியமைக்கப்படும் சுரங்கம்போன்ற குடைவு ஒன்றையே குறித்து வந்தது. ஆனல், இக்காலை அது குறிக்கும் பொருள்களைக் கொண்டு

நோக்கின் அதன் பண்டைப் பொருள் தெரியாதவண்ணம் அது பெரிதும் திரித்தே பயன்படுத்தப்பட்டு வருகின்றது என்பது புலனாகும். நீர்க்கனி என்று கூறின் அது கருமாயம் (Black Art) போல் பலர்க்குத் தோற்றும். வெடிபொருள்களை யுள்ளடக்கிப் பீப்பாய் போன்ற உருவமைந்து நீரின்கீழ் மிதந்து செல்லும் ஒரு மிதவை வெடிக்கனிக்கும் நிலத்தில் தோண்டப்படும் சுரங்கமாகிய கனிக்கும் யாதும் பொருத்தமிருக்கும் என்று கருதவுங்கூடுமோ? ஆயினும், வியக்கத்தக்கவாறு பொருத்தம் ஓர் வகையான் உள தென்பதைக் கீழே விளக்குவாம்.

## நிலக்கனி.

இருவேறு நாட்டினர்க்குட் பெரும்போர் நிகழ்ந்ததாயின் படைகளைத் தொலைக்கப் பல்வகையான சூழ்ச்சிகளை இருதிறத்தினரும் கையாள்வர். அவற்றில் ஒன்று எதிரிகளின் சேனை செல்லும் வழிதெரிந்து முன்கூட்டியே அவ்வழியில் குறிப்பிட்ட ஓரிடத்தில் நிலத்தைக் குடைந்து அறைபோற் செய்து அது நிறைய வெடிபொருள்களை யடைத்து குறிப்பிட்ட ஒரு சமயத்தில், அதாவது, எதிரியின் படைகள் அதன்மீது கடந்து செல்லும் பொழுதோ, அன்றி அதன் அருகாமையிற் செல்லும்பொழுதோ, அவ்வெடி பொருள்கள் வெடிக்குமாறு செய்வதும் ஒன்றாகும். இவ்வாறு வெடிபொருள்களை நிரப்புவான் வேண்டிக் குடைந்து தோண்டுவது உலோகப் பொருள்களைப் பெறுவான் வேண்டி நிலத்தைத் தோண்டிச் செல்வதைப் பெரும்பாலும் ஒத்ததேயாகும். எனவே உலோகப் பொருட் கனிக்கும் போர்த்துறை வெடிக்கனிக்கும் உள்ள பொருத்தம் எளிதில் தெளியப்படும்.

இனி, மேற்கூறியாங்கு நிலத்தின் மேற்பரப்பிலிருந்து உண்ணோக்கிக் குடைந்து நிலவறை யியற்றி அதன்கண் வெடி பொருள்களை நிரப்பிக் கனியமைத்தலொன்று; மறைந்துநின்று சண்டை செய்வதற் கென்று தோண்டப்படும் பள்ளங்களிலிருந்து எதிரியின் படை இருக்குமிடம் வரையில் குழாய்போல் நிலத்தின் கீழே நெடுகக் குடைந்து சென்று ஆங்கே வெடி பொருள்களை நிரப்பிக் கனியமைப்பது மற்றொன்று. பிற்கூறியவாறு எதிரியின் படைகள் தங்கியுள்ள இடத்தின்கீழ் வரையிலோ,

அன்றி அவர்தம் கோட்டைகளின் அடிப்புறம் வரையிலோ குடைந்து சென்று கனியமைத்து அதனை வெடிக்கச்செய்து எதிரிகட்குக் கேடிழைப்பது தற்காலப் போரில் ஒரு சிறந்த முறையாகும். இதை "அறைபோதல்" என்று கூறுவது மரபு.

தற்கால ஆங்கிலப் படையணியில் "குடைவோரும் அகழ்வோரும்" என்ற ஒரு படையினர் இருப்பதைப் பலர் அறிந்திருக்கலாம். (Q.V.O. S. M: அதாவது) "விக்டோரியா அரசியாருக்குச் சொந்தமான குடைவோரும் அகழ்வோரும்" என்றே ஒரு ஆங்கிலப் படையினர் நந்நாட்டில் இருந்து வருகின்றனர். "குடைவோரும் அகழ்வோரும்" என்பதால் பெயரளவில் அவர்கள் இருபிரிவினர்போற் ரோன்றினும் தாமியற்றும் பணியளவில் அவர்கள் ஒருவகையினரே. என்னை? கனியமைப்பதற்காக அவர்கள் நிலத்தைக் குடைவதும் அகழ்வதும் ஏறக்குறைய ஒரு தன்மையனவே யாதலின். சுருங்கக் கூறின், நிலத்தை அகழ்ந்து அதன்கண் கனியமைத்து அதன்மேல் எதிரிகள் நடந்து வா நேருங்கால் அக் கனியை வெடிக்கச் செய்து அவர்களுக்கு ஏதம் விளைப்பது அகழ்கனி; அவ்வாறின்றி எதிரிகளிருக்கு மிடத்தை நாடி உட்குடைந்து சென்று அவர்களடியில் வெடிக்கச் செய்து ஏதம் விளைப்பது குடைகனி. இக் குடைகனியே அறைபோதல் எனப்படுவதாம்.

எனவே நிலத்தின்கண் வேண்டியவாறு தோண்டியோ குடைந்தோ அவ்விடத்தில் வெடிபொருள்களை நிரப்பி, குறித்த காலத்தில் அவைகளை வெடிக்கச் செய்து எதிரிகளுக்குத் தீங்கிழைக்கக் கருதி யமைக்கப் படுவதே நிலக்கனியாகும்.

## எதிர்க்கனி

போர் நிகழ்ச்சியில் ஒரு படையினர் தம் எதிர்ப் படையினர் இருக்கும் இடத்தின் கீழ் அறைபோக நினைத்துக் "குடைகனி" அமைத்திடுவார். அது எதிர்ப்படையினருக்குத் தெரிந்தால் அதை இடைமறிக்கக் கருதி அவர்கள் எதிர்க்கனி யமைப்பார்கள். அஃதெவ்வாறு என்பதை ஒரு சிறிது விளக்குவாம்.

முருகன் என்பவன் தன் வீட்டிற் கெதிரிலுள்ள பொன்னன் என்பவனுடன் பகைமை கொண்டது கருதிப் பின்னவன் வீட்டின்

கீழ் அறைபோய்க் கனியமைத்து வெடிக்கச்செய்து ஏதம் விளைக்க முடிவு செய்ததாக வைத்துக்கொள்ளலாம். அம்முடிவைச் செயலளவில் நிறைவேற்றக் கருதி அவன் தன் வீட்டினோரறையில் தரை மட்டத்தின்கீழ் ஒரு குறித்த அளவு அகழ்ந்து அங்கிருந்து பொன்னன் வீடு இருக்கும் திசைநோக்கித் தெருவின் குறுக்கே குடைந்து செல்வான். அவன் செய்யும் இச்சூழ்ச்சியைப் பொன்னன் அறிந்து கொண்டானாயின், முருகன் குடைந்து வருவதற் கெதிராகத் தன் வீட்டிலிருந்து தான் குடைந்து வருவான். ஏறக்குறைய முருகனுடைய குடைகனி எதிரிடும் தூரம் வரையிற் குடைந்து வந்ததும் வெடிபொருள்களை ஆங்கு நிரப்பி வெடிக்கச் செய்வான். அவ்வாறு செய்தால் தன்கனியும் வெடித்து அதனருகிலுள்ள முருகனது கனியும் வெடித்துச் சிதறும். இதனால் பொன்னன் தன் வீட்டைக் காத்துக்கொண்டதோடு முருகன் செய்யும் சூழ்ச்சியைத் தான் முன்னமே அறிந்துகொண்டதாகவும் அவனுக்கு மறக்க முடியாதவகையில் விளக்கி விடுவான். இதற்கே எதிர்க்கனி யமைத்தல் என்று பெயர். ஈண்டு குறித்துக் கொள்ளவேண்டுவதொன்றுண்டு. அஃதென்னெனின், முருகன் தன்கனி வேலைசெய்ய வேண்டுமானால் தெருவின் அகலத்திற்கு குறுக்காகக் குடைந்து செல்ல வேண்டும்; பொன்னனோ தன் அறையிலிருந்து தெருவில் ஒரு பகுதிவரையிற் குடைந்து வந்தானானாற் சாலும்; அன்றித் தன் வீட்டிற்குச் சேதம் நேராத ஒரு எல்லை வரையிற் குடைந்து வந்தானானாலும் போதுமானது; ஆகவே எதிர்க்கனி யமைத்தல் அறைபோதலைவிட எளியதொன்றாகும் என்பதே.

(தொடரும்)

---

# *வையமெங்கும் தெய்வத் தமிழ்

திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., M.L.,

தமிழ்மொழியோடு தொடர்பில்லாத பண்டைமொழி யாதுளது? சீனமொழியில் (ஞான்) என்பதைக் கேட்டகாலை அச்சொல்லை மலையாள மென்னோமா? சீனர் தம்மை வானவ ரென்றால் சேர மன்னன் தன்னை ‘வான வரம்பன்’ என்பது யாதுபற்றி? (சீனர்க்குள்ள முன்

* இஃது துறையூரில் கூடிய தமிழர் மகாநாட்டில் நிகழ்த்தப்பட்ட விரிவுரையின் சாரமாகும்.

குடுமி மலையாளர்க்கும் உள்ளதுதானே.) சாலடியாரது பெரும்பதியின் பெயராய ஊர் என்பது இயற்றமிழ்க் கிளவியே. பாபிலோனிற்கு அருகே கிடைத்த பெஹிஸ்டுன் கற்பலகைகளின் மொழிகள் தமிழ் இலக்கணச் சார்பாயினவே. அவற்றிற் காணப்படும் கோ, நீ, என்ற சொற்கள் தமிழ்ச் சொல்லல்லவோ? டாக்டர் கால்டுவெல், மங்கோலிய மொழியொடு தமிழ்மொழியுஞ் சிந்திய பெருங் குடும்ப மெனின் வட சீனரோடு தமிழரும் ஒருகாலத்தே ஒருமொழி பேசினாரவ ரல்லரோ? ஜெர்மனிக்கு வடக்கே செல்வார் பின்னிய நாட்டிலே 'அன்ய' என்று தாயை அழைத்தல் கேட்டு அன்னை யென்ற தமிழ்மொழியை நினைந்து மகிழாரோ? தகப்பனைக் குறிக்கும் 'அப்பி' யென்ற சொல் 'அப்பா' வென்ற தமிழின் திரிபன்றோ? ஐரோப்பிய ருஷ்யாவில் வால்கா நதிக்கரையில் வாழு மக்கள் ஆம், தோல் கோழி என்ற சொற்களை வழங்குங்கால் அவர்களைத் தமிழர் என்னுமோ? ஆசிய ருஷ்யாவில் பனிக் கடற்கரையின்கண் வதியும் சாமோ யெட்டியா வழங்கும் அம்மா என்ற சொல்லும் தனித்தமிழே. நெருப்பினை அன்னார் தீ என்று தானே கூறுவர்? எகிப்தியர். ஹோரஸ் என்றால் அது தொல்காப்பியர் கூறும் ஓரையை நினைவூட்டு மன்றோ? கிரீக்கர் அரிசி என்ற சொல்லையும் ஹிபுரு மக்கள் துகில், (மயிற்றோகை) என்ற சொல்லையுந் தமிழ் வணிகர்பாற் கற்றவர்தாமே? பெலுச்சிஸ்தானத்தில் வழங்கும் பிராகுயி தமிழ் இனமன்றோ? வட இந்தியாது உள்நாட்டு மொழிகளுக்கும் திராவிடமொழிகளுக்கும் இலக்கண அமைப்பு ஒன்றென்ற காலஞ்சென்ற கனம் பி. டி. ஸ்ரீநிவாச ஐயங்கார் கூற்று உண்மையாயின் அவைகளும் தமிழினம் அல்லவோ? சில பண்டிதர்கள் ஆப்பிரிக்காமொழிகள் சிலவற்றிற்கும் தமிழுக்கும் பொருத்தங் கூறுகிறார்களே!

அமெரிக்காக் கண்டத்தின் மெக்சிகோவில் தோண்டி யெடுக்கப்படும் கற்சிற்பங்கள் தமிழர் வடிவு காட்டுகின்றனவே! ஆஸ்திரேலிய பழங்குடிகள் தமிழ் நாட்டுப் பழங் குடிகளோடு ஒத்த உடலமைப்புடையார் எனின் அவர் நம் இனத்தவரேயோ? இவற்றை யெல்லாம் எண்ணுங்கால 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்ற சங்கப் புலவர் திருமொழி என்றும் நிலைத்த சரித வன்மை தெரிக்கும் பொன்மொழியாதல் காண்க.

தமிழ்மொழி, கிரீக், லத்தீன், ஆரியம், அரபி, இங்கிலீஷ், ஜர்மனி முதலிய எந்த மொழிக்கும் பின்னிடாத பெருமை யுடைத்தா யிருத்தலோடு பண்டும் இன்றும் என்றும் மூவாச் சாவா மொழி என்பது இக்காட்டிலும் மேல் நாட்டிலும் தமிழ் கற்றறிந்த பலரும் உடன்பட்ட உண்மையாகும். இதன் கல்வி தமிழர்க்கே யன்றி வட மொழியாளர்க்கும் பிற மொழியாளர்க்கும் வேண்டுவதொன்றே. வடமேற்கு இந்தியாவில் ஆரிய மொழிகள் புகுந்த காலை திகழ்ந்த நாட்டு மொழிகள் தமிழ் இனத்தனவாதலின் திராவிடத்

தொடர்புகள் வேதத்திலும் பிற்கால வட மொழி நூல்களிலும் வட நாட்டு உள் மொழிகளிலும் காணக்கிடப்பன எனக் கேம்பிரிட்ஜில் வடமொழிப் பேராசிரியராய் விளங்கும் ஆசிரியர் ராப்ஸன் கூறியது உற்று நோக்கத் தக்கது. இப்போதுள்ள திராவிட மொழிகளிலெல்லாம் தனித் தியங்கும் பேராற்றல் வாய்ந்தது தமிழே யென டாக்டர். கால்டுவெல் கூறியதும் காண்க.

ஆதியிற் பனிமலை தொட்டுக் குமரிமுனைவரை இந்தியநாடெங்கும்தமிழர் பரவி யிருந்தமையால், இந்திய நாகரிகம், தமிழர் நாகரிகத்தை அடிப்படையாக உடைய தென்பதும், அதைத் தமிழ் மொழியானது கண்ணாடி போற் காட்ட வல்லது என்பதும் டாக்டர் கில்பர்ட் சிலேட்டர் என்பவரால் அழகுற இயம்பப்பட்ட உண்மைகளாம்.

இதனால், இந்திய நாகரிக சரிதத்தை நன்கறிய விரும்பும் எவரும் பழந் தமிழ் இலக்கியங்களை ஆய்தல் வேண்டு மென்பது புலனாகும்.

உலகினர்க்கு இன்பவாழ்க்கைக்கு இலக்கணம் தொல்காப்பியத்திலன்றோ உளது? காதல் மணம், கலப்பு மணம் என்னும் இக் கருத்துக்கள் ஆதித்தமிழர் உலகிற்களித்த பயன்களல்லவோ? இவை சிற்றின்பப் பகுதிய வெனின் பேரின்பப் பாடல்கள் தமிழிலுள்ள அளவு எம்மொழியிலுள்ளன? நாயன்மார்களும் ஆழ்வார்களும் அமைத்த அருளா ரமுதப் பெருங் கடல்கள் தமிழ் நிலத்தின்கண்ணே தாம் உள்ளனவாம்.

உடற் காப்புக்குத் தமிழ் மருத்துவ நூலினுஞ் சிறந்தது யாண்டுளது? தமிழர்களது மந்திரம், மருந்து, மணி, யோகம், வாதம் எல்லாம் சித்த மருத்துவ மலையிலன்றோ திகழ்வன? அவற்றைப் பாதுகாவாமையால் வந்த இழுக்கிற்கு யாவர் காரணர்?

தமிழரது கவின் கலைகள் அவர்களது அழியாத திருக்கோயில்களில் இன்றும் திகழ்வனவாமே. கட்டிடம், ஓவியம், கற்பணி, இசை, கூத்து, என்பவற்றில் தமிழரை விஞ்சிய பண்டையர் யாவர்? தமிழர் திருக்கோவில் விழாக்களெல்லாம் தமிழர் சோதிடக் கணக்கின்படி நிகழ்வனவே. அது கதிரவன் செலவை வைத்து அமைத்த நன்முறை யன்றோ?

## தமிழர் வளர்ச்சி முறை

தமிழர்கள் நிலைவரமான முன்னேற்ற மடைய வேண்டுமாயின் ஆழ்ந்த தமிழ் நூற் கல்வியும் அதற்குத் துணையாகப் பயிலுதற்குரிய அறிவியற் கலை, சரித்திரக் கலை முதலியனவும் தமிழ்நாடெங்கும் பரவுதல் வேண்டும். தமிழை வளர்க்கக் கருதுபவர்கள் தமிழ் நூல்களை யாவரும் கற்கும்படி செய்தல் வேண்டும். இக்காலத்திலே தமிழை வளர்க்கும் அறிவாற்ற லுடையார் பலர் இருந்தும் தமிழ் வளர்ச்சி செவ்விதின்

கிழாமைக்கு ஒரு காரணம் பொழுதுபோக்கவாதல் அறிவின்பொருட்டாதல் தமிழ் உரைநடை நூல்களையாதல் கற்பாரின் தொகை குறைவாயிருத்தலே. தக்க தமிழ்நூற் பிரதிகளைச் சகாய விலை கொடுத்தாயினும் வாங்குவார் மிகக் குறைவாகவே உள்ளார். அணியிலுந் துணியிலும் ஆயிரம் ஆயிரமாகச் செலவழிப்பவர்கள் தமிழ்ப் புலவர்கள் உழைத்தெழுதிய தமிழ்நூற் பிரதிகளுக்கு அரை ரூபா கொடுக்கவும் பின் வாங்குகின்றார்களே!

தமிழிலே பொதுமக்களுக்குப் பயன்படக்கூடிய உரைநடை நூல்கள் எத்தனையோ எழுதப்படவேண்டும். சிறந்த அகராதிகள் இயற்றப்படவேண்டும். ஆராய்ச்சி நூல்களும் மொழிபெயர்ப்பு நூல்களும் பல வெளியாதல் வேண்டும். இவற்றிற் கெல்லாம் கோவில்கள் ஆதீனங்கள் முதலிய பொது நிலயங்களிலுள்ள தர்மச் சொத்துக்களின் வரும்படிகளைப் பயன்படுத்த வேண்டிய முயற்சிகள் இதுபோன்ற சங்கங்களால் மேற்கொள்ளப் படவேண்டும்.

தமிழர் முன்னேற்றத்திற் கேற்ற முறையாகத் தொடக்கக்கல்வி நமது சிறுவர் சிறுமியர்களுக்குக் கொடுக்கப்படுதல் வேண்டும். நினைவுக்கு மிகுந்த சுமையை ஏற்படுத்தாமல் நமது பண்டைக் கணித வகைகளும் சிறு நீதி நூல்களும் சமய உரைநடை நூல்களும் பல்வகை இன்னிசைப் பாடல்களும் எளிதாய்க் கற்றற் குரிய இடமாய்த் தமிழர் மாண்பு விளங்கும் பண்டை வரலாறுகளும் நமது நாட்டுப் பிராணிகளையும் செடி கொடிகளையும் பற்றிய விவரங்களும் செந்தமிழிலே போதிக்கப்படும் இலவசக் கல்லூரிகள் ஒவ்வொரு சிற்றூரிலும் நிறுவப்படல் வேண்டும். அவைகளிலே போதகாசிரியர்கள் நல்லொழுக்கமும் ஆற்றலும் இரக்கமும் உண்மைத் தமிழ்ப் பற்றும் உடையவர்களா யிருத்தல் வேண்டும்.

இக் கல்லூரிகளிலே ஐந்தாண்டு கல்வி கற்றபின் ஆங்கிலக் கலாசாலைகட்குச் செல்ல இயலாதார் உயர்தரத் தமிழ்க் கல்வியும் ஆங்கிலக் கல்வியும் பெறுதற்குரிய கலாசாலைகள் தாலூக்காக்களிலே மாணவர் விடுதிகளோடு நிறுவப்படுதல் வேண்டும். உடற்பயிற்சியும் கைத்தொழிலும் அவற்றிற் கற்பிக்கப்படுதல் வேண்டும்.

அயல்நாடு சென்று கைத்தொழிற் கல்வி கற்பதற்கு அறிவு சிறந்த மாணவர்களை அனுப்ப ஒரு நிதி சேர்த்தல் வேண்டும். அங்ஙனம் அயல் நாட்டு முறைகள் கற்று வந்தவர்கட்கு நம்மவர்கள் ஆதரவளிக்கவேண்டும். அவர்கள் வாயிலாகக் கைத்தொழில் பலவற்றையும் போதிக்கும் நூல்கள் வெளியிடப்படுதல் வேண்டும். கைத்தொழிற் கல்லூரிகள் அமைக்கப் பட வேண்டும்.

—லோகோபகாரி

---



தருமபுரவாதீன வித்வான்

காழி. சிவ. கண்ணுசாமிபிள்ளை, B. A.



சங்க நூற் புலவர்

திரு. A. நடராஜபிள்ளை.